# மொழிப் பிரச்னையில்

# மார்க்சிஸ்டுகள் நிலை





எழுதியது :

பி. ராமமூர்த்தி எம். பி.

கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
வெளியீடு

# மொழிப் பிரச்னையில் மார்க்சிஸ்டுகள் நிலை

எழுதியது :

பி. ராமமூர்த்தி எம். பி.




வெளியீடு

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி
(மார்க்சிஸ்ட்)

153, டாக்டர் நடேசன் ரோடு, சென்னை-5

விலை 30 காசு

# வேறு எங்குமில்லாத விசித்திர நிலைமை

சுதந்திரம் அடைந்த இருபது ஆண்டுகள் முடிந்துவிட்ட போதிலும்மொழி பிரச்சினை நாட்டின் எல்லா பகுதிகளிலும் குழப்பத்தையும் கலவரத்தையும் விளைவித்துள்ளது. தமிழ் நாட்டில் மட்டுமல்ல; ஆந்திரம், கர்நாடகம், கேரளம், உத்தர பிரதேசம், மத்தியப்பிரதேசம், டில்லி, மேற்கு வங்கம் ஆகிய மாநிலங்களிலும் மொழிப்பிரச்சினை பற்றிய கிளர்ச்சிகளும், ஆர்ப்பாட்டங்களும், போராட்டங்களும் சமீப மாதங்களில் நடைபெற்றன; இன்னும் நடந்து கொண்டிருக்கின்றன.

உலகத்தில் சுதந்திரமான வேறெந்த நாட்டிலும் மொழி சம்பந்தமான இத்தகைய நிலையைக்காண முடியாது. அவ்வாறு இருக்க, இந்தியாவில் மட்டும் இந்நிலை ஏற்பட்டதற்குக் காரணமென்ன? இப்பிரச்சினையை சுமுகமாகத் தீர்க்க முடியுமா? அல்லது இக்குழப்பம் வளர்ந்து, நாட்டின் சீர்குலைவில் கொண்டு விடுமா? இவைகளெல்லாம் நம்நாட்டின் முன்பும் மக்கள் முன்பும் உள்ள முக்கியமான அவசரப் பிரச்சினைகள்.

1947 ஆகஸ்டு 15ம் நாளன்று இந்தியா சுதந்திரம் அடைந்தது. அது முதற்கொண்டு மூன்றுண்டுகளாக விவாதம் நடத்தி இந்தியாவின் அரசியல் சட்டத்தை (Constitution) அன்றிருந்த அரசியல் நிர்ணய சபை வகுத்தது. அச்சட்டம் 1950ம் ஆண்டு ஜனவரி 26ம் நாள் முதல் அமுலாயிற்று அரசியல் சட்டத்தின் ஒரு அத்தியாயம் மொழி பற்றியது அரசியல் சட்டம் அமுலான நாள் முதற் கொண்டு 15ஆண்டுகள் முடிந்தவுடன், அதாவது 1965 ஜனவரி 26-ம் நாள் முதற்கொண்டு இந்தி மத்திய சர்க்காரின் ஆட்சி மொழியாகும் என்று 343வது (செக்ஷன்) பிரிவு கூறுகிறது.

அவ்வாறு கூறிய பிறகும் அது நடைமுறையில் சாத்தியமாகுமா என்பது குறித்து அரசியல் சட்டத்தை வகுத்த உறுப்பினர்களுக்கேச் சந்தேகம் தோன்றியது. அதனால், அடுத்த பிரிவில் வேறுன்றைக் கூறினர்கள். இந்தி மத்திய சர்க்காரின் ஆட்சிமொழியான போதிலும் ஆங்கிலம் இதற்கு முன்

என்னென்ன அலுவல்களுக்குப் பயன்படுத்தப்பட்டு வந்ததோ அவைகளில் குறிப்பிட்ட அலுவல்களுக்கு குறிப்பிட்ட காலம் வரையிலும், தொடர்ந்து அதை உபயோகிக்கலாம் என்று நாடாளுமன்றம் சட்டமியற்றி அமுலாக்கலாம் என்று கூறுகிறது அந்தப் பிரிவு.

1965ம் ஆண்டு நெருங்க நெருங்க, இந்தி, மத்திய சர்க்காரின் ஏக ஆட்சி மொழியாவதை எதிர்த்து தமிழகத்திலும் மற்றும் இந்தி பேசாத மாநிலங்களிலும் பலத்த எதிர்ப்பு வளர்ந்தது. இதைச்சமாளிக்க, அன்றிருந்த பிரதமர் நேரு ஒரு வாக்குறுதி அளித்தார். இந்தி பேசாத மக்கள் விரும்பும் வரையில், ஆங்கிலமும் மத்திய சர்க்காரின் துணை ஆட்சி மொழியாக இருக்கும் என்பதே அந்த வாக்குறுதி.

இதை நிறைவேற்றும் வகையில், 1963 ல் ஒரு சட்டம் நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப் பெற்றது. 1965க்குப் பிறகும், மத்திய சர்க்காரின் அலுவல்களுக்கு ஆங்கிலமும் பயன்படுத்தப்படலாம் என்று கூறியது அச்சட்டம். ''உபயோகப்படுத்தப்படலாம்'' என்று தானே இச்சட்டம் கூறுகிறது? ''உபயோகப்படுத்தப்பட வேண்டும்'' என்று திட்டவட்டமாகக் கூறவில்லையே என்று அன்று இச்சட்டத்தின் மீது அதிருப்தி தெரிவிக்கப்பட்டது. மேலும், இந்தி பேசாத மக்களின் விருப்பமின்றி ஆங்கிலம் உபயோகப்படுத்தப்படுவது நிறுத்தப்படமாட்டாது என்ற ஷரத்தும் இச்சட்டத்தில் இல்லை.

1965 ஜனவரி 26ம் நாள் நெருங்கும் போது, அதற்கு முதல் நாள் முதற்கொண்டு, இந்தியை எதிர்த்துத் தமிழ் நாடு, ஆந்திரம், கேரளம், மேற்கு வங்கம் ஆகிய மாநிலங்களில் நடந்த போராட்டங்களை நாடு அறிந்ததே. 1942 ஆகஸ்டு மாதத்தில் வெள்ளையரின் ஆட்சியை எதிர்த்து நாடு பூராவும் ஏற்பட்ட எழுச்சிக் கொப்பானதாக இருந்தது இந்தப் போராட்டத்தின் வீச்சும், வேகமும். நேரு ஏற்கனவே கொடுத்த வாக்குறுதியை நேர்மையாக, முழுமையாக நிறைவேற்றுவதாக அன்றிருந்த பிரதமர் லால்பகதூர் சாஸ்திரி மீண்டும் வாக்குறுதியளித்தார்.

இவ்வாறு சட்டமியற்றினுல் மட்டும் போதாது, அரசியல் சட்டத்தையே திருத்த வேண்டும் என்ருர் ராஜாஜி. தி. மு. க, வும் அதையே வற்புறுத்தியது.

1967 டிசம்பரில் நாடாளுமன்றம் ஏற்கனவே இருந்த 1963வது ஆண்டு மொழிச்சட்டத்தை திருத்திய மசோதா ஒன்றை விவாதித்தது. அதோடு கூடவே, அரசாங்கத் தரப்பில் கொண்டு வரப்பட்ட ஒரு தீர்மானத்தையும் விவாதித்தது. இறுதியில் இவ்விரண்டும், சில திருத்தங்களுடன் காங்கிரஸ் கட்சிக்குள்ள பெரும்பான்மை பலத்தினுல் நிறைவேற்றப்பட்டன.

ஆயினும் கிளர்ச்சி நின்றபாடில்லே. மாருக, இந்தத் தடவை, டில்லி, உத்திரப் பிரதேசம் முதலிய இந்தி பேசும் மாநிலங்களிலும் கிளர்ச்சி நடக்கிறது. ஆனுல் அங்கு நடக்கும் கிளர்ச்சி ஆங்கிலத்தை எதிர்த்து!

தமிழ் நாட்டில் 1965-ம் ஆண்டில் நடந்த போராட்டத்தில் எழுப்பப்பட்ட கோஷம் ''இந்தி எப்பொழுதும்கூடாது; ஆங்கிலம் என்றைக்கும் வேண்டும்'' என்பதாகும், 1968 ல் எழுப்பப்பட்டும் கோஷம் ''இந்தி ஒழிக; தமிழ்வாழ்க'' என்பதாகும்.

எனினும், ஆங்கிலம் மத்திய சர்க்காரின் ஏக அலுவல் மொழியாக நீடித்திருக்க வேண்டும் என்ற எண்ணமும் பரவலாக உள்ளது. ராஜாஜியோ, ஆங்கிலம் ஏகஆட்சி மொழியாக இருந்தால் தான் இந்தியாவின் ஒற்றுமையைப் பாதுகாக்க முடியும் எனக்கூறுகிருர்.

இந்தியை வேண்டுவோர், ஆங்கிலம் நீடித்தால் இந்திய ஒற்றுமைக்குஆபத்து; இந்திதான் ஒற்றுமையைக்காப்பாற்ற முடியும் என்று வாதிக்கின்றனர்.

ஆங்கிலத்திற்கு வடக்கே எழுந்த எதிர்ப்பைப்பார்த்து, ராஜாஜி, இந்தி வியாபாரத்திற்காக சந்தை மொழியாக இருக்கட்டும்; ஆங்கிலம் சர்க்கார் அலுவல் மொழியாக இருக்கட்டும் என்று கூறுகிருர்.

சமீபத்தில் ''இந்தப்பிரச்சினைக்குத் தீர்வு காண என்ன அவசரம்? நாட்டின் முன்பு எவ்வளவு பொருளாதாரப் பிரச்சினைகள் இருக்கின்றன? இவைகள் தீர்க்கப்பட்டு நாடு வளம் பெறும் வரையில், இது வரை இருந்த நிலையே நீடிக்கட்டும்'' என்று கூறுகிறார்.

நாட்டின் பொருளாதாரப் பிரச்சினைகள் தீர்க்கப்பட்டு, வளமிக்க நாடாக இந்தியா எப்பொழுது ஆகப்போகிறதோ அதுவரை ஆங்கிலம் மட்டும் மத்திய சர்க்காரின் அலுவல் மொழியாகக் கால வரையின்றி நீடிக்கட்டும் என்பதே இதன் பொருள்

இவ்வாண்டில் எதையும் அமுலாக்கி நிலைமையைச் சமாளிக்க முடியாது என்பது தெளிவு. இந்தியை ஏக ஆட்சி மொழியாக்குவது என்பதைத் தமிழகம், ஆந்திரம், மைசூர், கேரளம், மேற்குவங்கம் ஆகிய மாநில மக்கள் ஒரு போதும் ஏற்கமாட்டார்கள். பயங்கர அடக்கு முறையைக் கையாள வேண்டும்.

அதே போன்று ஆங்கிலத்தை ஒரேயொரு அலுவல் மொழியாக நீடிப்பதை இந்தி பேசும் மாநிலங்களும் குஜராத் மகாராஷ்டிரம் முதலிய இந்தி பேசாத மாநிலங்களும் ஏற்கமாட்டா என்பதும் தெளிவு. இம்முயற்சியில் ஈடுபட்டால் அம்மக்களின் மீது பயங்கர அடக்கு முறையை ஏவி விட வேண்டும் என்பதைச் சமீபத்திய நிகழ்ச்சிகள் தெளிவாக்கி விட்டன.

## துப்பாக்கி முனையில் முடியுமா?

பல கோடி மக்களின் மீது துப்பாக்கிச் சூடு நடத்தி, அடக்கு முறையைக் கொண்டு இந்தியாவின் ஒற்றுமையை நிலை நாட்டுவது என்பது சாத்தியமே அல்ல. எனவே, எந்த ஒற்றுமையைப் பாதுகாப்பது என்ற பேரால் இம்மாறுபட்ட யோசனைகள் கூறப்படுகின்றவோ, அவைகளில் எதுவும் அந்த ஒற்றுமையைப் பாதுகாக்காது; மாறாக வெகு வேகமாக ஒற்றுமையைச் சீர்குலைக்கும்.

இந்தியை தனியொரு ஆட்சிமொழியாக்க துடிக்கும் பலர் இனவெறியினால் தூண்டப்பட்டுள்ளனர் என்பது தெளிவு. இந்த வெறியின் அடிப்படையில் எழுந்துள்ள கோரிக்கை, நிச்சயமாக மற்ற மக்களிடையே அதற்கெதிரான வெறியைக் கிளப்பி நாடு சீர்குலைவதில் தான் கொண்டு விடும்.

ராஜாஜி மூதறிஞர்; மிகப்பெரிய தீர்க்கதரிசி; எனவே அவர் யோசனை தான் சரியாக இருக்கும் என்ற கூற்றுக்கு ஆதாரமே இல்லை.

1938ஆம் ஆண்டில் அவர் சென்னை "ராஜதானி"யின் முதலமைச்சராக இருந்த காலத்தில் இந்தியைக் கட்டாய பாடமாக்கிய திட்டத்தைக் கொண்டு வந்து, அதை நிறைவேற்றுவதற்காக ஆயிரக்கணக்கான தமிழர்களை சிறைக்கனுப்பினார்.

பிறகு அரசியல் சட்டத்தை வகுத்த அரசியல் நிர்ணய சபையில் மிகவும் முக்கியமானதோர் உறுப்பினராக இருந்தவராம் ராஜாஜி. அப்பொழுது மொழி சம்பந்தமாகஅரசியல் சட்டத்தில் நிர்ணயிக்கப்பட்ட பிரிவுகளை அவர் ஆட்சேபிக்கவில்லை.

அதற்குப் பிறகு 1950ல் ஒரு சர்வகலாசாலையின் பட்டமளிப்பு விழாவுக்குத் தலைமை தாங்கி நிகழ்த்திய உரையில் நீண்ட காலம் மத்திய சர்க்கார் அலுவல்கள் இருமொழிகளில்—இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் நடப்பதைத் தவிர்க்க முடியாது என்று கூறியதும் ராஜாஜி.

இதற்குப்பிறகு, நேருவின் வாக்குறுதியை நிறைவேற்றும் வகையில் அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்று கூறினார்.

அதற்கப்பால் ஆங்கிலம் மத்திய அரசின் ஏக அலுவல் மொழியாக ஏற்றுக் கொள்ளப்பட்டு, அரசியல் சட்டத்தை திருத்த வேண்டும் என்று கூறினார், இறுதியாக, இந்தப் பிரச்சினையையே ஒத்திப் போடவேண்டும் என்று கூறுகிறார்.

இவ்வளவு மாறுபட்ட நிலைகளில் எதை தீர்க்க தரிசனத்தின் அடிப்படையில் எழுந்ததாகக் கொள்ள முடியும்? மாறாக ஒரு பிரச்சினையில் இவ்வளவு மாறான நிலைகளை எடுப்பதே தீர்க்க தரிசனமின்மையைத்தானே காட்டுகிறது? இறுதியாகக் கூறும் யோசனை-பிரச்சினையை ஒத்திப்போடும் யோசனை—இந்திய மக்கள் அனைவரையும் ஒன்றுபடுத்தக் கூடிய யோசனை அவரால் கூறமுடியவில்லை என்பதையும் பிரச்சினையிலிருந்து தப்பித்து ஓடுவதற்கொரு வழிதேடுகிறார் என்பதையுந்தானே காட்டுகிறது?

அரசியல் சட்டத்தின் மொழி பற்றிய பகுதியை அமுலாக்க முடியவில்லை என்பது தெளிவு. காரணம் அரசியல் சட்டத்தின் இப்பகுதி, இன்னும் பல பகுதிகளைப்போல, ஜனநாயகத்திற்கும், இந்நாட்டின் யதார்த்த நிலைகளுக்கும் முரண்பட்டவையாக அமைந்துள்ளது. உண்மையில் நாட்டில் ஏற்பட்டுள்ள கொந்தளிப்பானது—இந்த ஜனநாயக விரோத சட்டப்பிரிவுகளை—அவைகளுக்கு அரசியல் சட்டம் என்ற புனிதத்தன்மையான தொரு போர்வையைப் போர்த்திய போதிலும்—ஜனநாயக ஆர்வம் கொண்ட மக்கள் ஏற்க மறுக்கின்றனர் என்பதையே சுட்டிக்காட்டுகிறது.

அரசியல் சட்டத்திற்குள் நின்று கொண்டே இப்பிரச்சினைக்குத் தீர்வு காணமுயல்வது வீண். இவ்வாறு முயல்வது, இந்த மோதலை மேலும் மேலும் ஓங்கி வளர்க்கும். ஜனநாயகம் வெல்லப் போகிறதா? ஜன நாயக விரோத அரசியல் சட்டப் பிரிவுகள் வெல்லப் போகின்றனவா? இதுவே மொழிப் பிரச்சினையில் இன்று ஏற்பட்டுள்ள கொந்தளிப்பின் கருப் பொருள்.

# தேசிய இனப் பிரச்சினை

மொழிப் பிரச்சினைக்குப் பின்னே ஆழமாகப் புதைந்து கிடப்பது இந்தியாவில் உள்ள தேசிய இனங்களின் பிரச்சினை. பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி, போலந்து ஆகிய ஐரோப்பிய நாடுகளைப் போலவோ, ஈரான், ஈராக், ஜப்பான் முதலிய ஆசிய நாடுகளைபோலவோ, இந்தியா ஒரே ஒரு தேசிய இன அரசு அல்ல. மாறாகப் பல தேசிய இனங்களைக் கொண்டுள்ள அரசு இந்திய அரசின் அமைப்பு இது. இன்றுள்ள உண்மை நிலவரம் இது.

இந்த உண்மையை மறுத்து, மொழிப் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியாது; இந்திய அரசின் ஒற்றுமையை வலிமை மிக்கதாகச் செய்யவும் இயலாது.

## ஐரோப்பிய அனுபவம்

பிரிட்டனிலோ, பிரான்சிலோ, அதுபோன்ற நாடுகளிலோ நாடு ஒன்றுபட வேண்டும்; பிரிவினை கூடாது என்று யாராவது சொற்பொழிவுகள் நிகழ்த்துவதை நாம் கேட்பதுண்டா? ஒரே தேசிய இன அரசாட்சியில் இத்தகைய பிரச்சாரத்திற்கு அவசியமே இல்லை. மாறாகக் கனடா, இலங்கை போன்ற ஒன்றுக்கு மேற்பட்ட தேசிய இன அரசாட்சிகளில் தான் இத்தகைய பிரச்சாரத்திற்கு அவசியமே ஏற்படுகிறது. அதே போன்றதுதான் இந்தியாவும்.

'தேசிய இனம்' என்ற உணர்வு சமுதாயத்தின் வளர்ச்சி போக்கில் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில் தோன்றி வளர்ந்து, தேசிய இனங்களாக மலர்கின்றன. முதலாளித்துவ சமுதாயத்துக்கு முந்திய கால கட்டத்தில் ''மார்க்கெட்டு''கள் பெரிதாக வளரவில்லை. சமுதாயத்தில் உற்பத்தியாகும் பொருள்களில் பெரும்பகுதி அந்தந்தக் கிராமத்திலேயே உபயோகப்பட்டுவிடும். உபரியாக, மார்க்கெட்டுக்கு வரும் பொருள்கள் மிகக்குறைவு. அந்த நிலையில் இன உணர்ச்சிக்கு இடமில்லை. மாறாக, முதலாளித்துவ சமுதாயம் வளரும்போது, உற்பத்தியாகும் பொருள்களெல்லாம்

பிறர் உபயோகத்திற்காக உற்பத்தி செய்யும் முறையாக மாறும்போது சந்தைகளும் விரிவடைகின்றன, போக்கு வரத்தும் பிரம்மாண்டமாக—இதற்கு முந்திய காலத்தில் என்றும் இல்லாத அளவு—விரிவடைகின்றன. அந்தக்காலத்தில் தான் தொடர்ந்தாற்போன்ற ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் வசிக்கும், வரலாறு பூர்வமாக வளர்ந்து வந்துள்ள பொதுவான பராம்பரியத்தையும் பண்பாட்டினையும் கொண்டுள்ள ஒரே வித மொழிகள் பேசும் மக்களிடையே தேசிய இன உணர்வு தோன்றி வளர்ந்து, தேசிய இனங்கள் மலர்கின்றன. ஒரு இனம் மற்றொரு தேசீய 'இனம் தன்னைச் சுரண்டுவதையும் அடக்கி ஒடுக்கி ஆள்வதையும் சகிக்காமல், தனி அரசாட்சிக்காகவும், ஆதிபத்திய உரிமைக்காகவும் போராடுகிறது. இந்த வாலாற்றுப் போக்கிலே ஐரோப்பா கண்டத்தில் தேசீய இன அரசுகள் தோன்றி வந்தன.

## இந்திய வரலாறு வேறு

இந்தியாவின் வரலாறு வேறு வகையானது. பலமொழிகளைப் பேசும் மக்களைக் கொண்ட நாடு இந்தியா. பிரிட்டிஷ் ஆட்சிஏற்படும் வரையில் இந்தியா ஒரே அரசாகத்திகழ்ந்தது கிடையாது. ஒரே அரசின் கீழ் இருந்ததும் கிடையாது. பல்வேறு சின்னஞ்சிறு அரசுகளாக அமைந்து, மாறிமாறி, இருந்து வந்தது இந்த நாடு.

தேசீய இன உணர்வுக்கு அன்று இடமில்லை. ஏனெனில் அன்றிருந்த சமூக அமைப்பு, சுயதேவையை பூர்த்தி செய்து கொள்ளும் கிராமங்களை அடிப்படையாகக் கொண்டிருந்தது. உற்பத்தியாகும் பொருள்களில் மிகச்சிறிய பகுதியே மார்க்கெட்டு விற்பனைக்கு வரும் பண்டங்களாக இருந்தன.

இத்தகையதோர் அமைப்பிலே, ராஜபக்திக்கு இடமிருந்ததேயன்றி, தேசியஇன உணர்வுக்கல்ல. அந்தராஜபக்தியும் நிர்ப்பந்தமாக பின்னல் புகட்டப்பட்டது. அதனால்தான் எத்தனையோ அரசவம்சாவளிகள் தோன்றிமறைந்தபோதும், ராமன்ஆண்டால் என்ன, ராவணன் ஆண்டால் என்னஎன்று பொதுமக்கள் வாளாயிருந்தனர்.

தமிழ் நாட்டை எடுத்துக் கொண்டால், சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் அரசுகளாக அது பிரிந்து கிடந்தது. அந்தந்த மன்னன் படையில் சேர்ந்திருந்த தமிழர்கள் அந் தந்த் மன்னனுக்காகப் போராடிய வரலாறு உண்டேயன்றி, இன்று நாம் காண்பது போல் தமிழ் நாட்டின் விடுதலைக்காக, தமிழ் இன விடுதலைக்காக தமிழ் மக்கள் போராடியதாக வரலாறு கிடையாது. பிந்திய காலத்தில் பல்லவர்கள் நாயக்கர்கள், மராட்டியர்கள் போன்ற பிற மொழி பேசும் மன்னர்கள் தமிழ் நாட்டின் பல பகுதிகளில் ஆண்டபோதும் விடுதலை இயக்கம் நடந்ததாக வரலாற்றிலில்லை.

பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆட்சியின் கீழ் நாடு பூராவும் வந்த பிறகு, இந்நாட்டின் பொருளாதாரத்தின் பழைய முறை தகர்க்கப்பட்டது. பிரிட்டிஷ் சுரண்டலின் தேவைகளுக் காக, உற்பத்தியாகும் விவசாயப் பொருள்களும் சந்தைப் பொருள்களாக மாறின. போக்கு வரத்துகள் இதற்கு முந்தி என்றுமில்லாத வகையில் விரிவாக்கப்பட்டன.

இந்த காலகட்டத்தில்தான்தேசிய இஉணர்வும் தோன்றி வளர ஆரம்பித்தது. ஆனல், இந்தியாவில் உள்ள எந்த ஒரு இனமும் மற்ெருரு இனத்தைச் சுரண்டும் நிலைஇல்லை. மாருக இந்தியாவிலுள்ள எல்லா இனங்களையும், பிரிட்டிஷ் ஏகாதி பத்தியம் சுரண்டி, அடக்கி ஆண்டு வந்த நிலை அது.

எனவே, பிரிட்டிஷ் ஆட்சியை அகற்றவேண்டும் என்பதற் கான போராட்டம் எல்லா இன மக்களையும் தழுவிய, நாடு தழுவிய இயக்கமாக வளர்ந்தது. இந்த இயக்கத்திலும், போராட்டங்களிலும் வளர்ந்ததே இந்திய மக்களின் ஒற்றுமை.

விடுதலை இயக்கம் ஜனநாயகத்திற்கும், இந்த இன உணர்ச்சிக்கும் மதிப்புக் கொடுத்தது. பிரிட்டிஷ் ஆட்சியில் பல்வேறு மாநிலங்களில் பல்வேறு மொழிகளைப் பேசும்மக்கள் பலவந்தமாக இணைக்கப்பட்டிருந்ததற்குமாருக தேசிய இயக் கம் 40 ஆண்டுகட்கு முன்பே மொழிவழி மாநிலக் கோரிக் கையை முன் வைத்தது. மேலும் நீதி, நிர்வாகம் ஆகியவை

மாநிலங்களில் அந்தந்த மொழிகளிலேயே நடக்க வேண்டும் என்பதையும் ஏற்றுக்கொண்டது.

உயர் மட்டம் வரை, கல்வி ஆங்கிலத்திலல்லாது அந்நந்த மாநிலத்தின் மொழியிலிருக்க வேண்டும் என்பதை வற்புறுத்தியது.

அரசியல் அதிகாரம் இல்லாத நிலையில் இக்கோரிக்கைகளை நிறைவேற்ற இயலாத போதிலும், தன்னுடைய நடைமுறையில் இந்தக் கொள்கைகள் அமுலாக்கப்பட்டன.

காங்சிரசின் அமைப்பில் மாற்றங்கள் செய்யப்பட்டன. பிரிட்டிஷ் ஆட்சியில் இருந்த மாநில அமைப்புக்கு மாருக மொழி அடிப்படையில் மாநிலக் கமிட்டிகள் அமைக்கப்பட்டன. அக்கமிட்டிகளின் நடவடிக்கைகள் அந்தந்த மொழியிலேயே இருந்தன.

மக்களிடத்தில் பேசியது ஆங்கிலத்திலல்ல, அவர்கள் பேசும் மொழிகளிலேயே இயக்கம், பிரச்சாராம் நடைபெற்றன.

இவைகளின் விளைவாக, ஜனநாயக ஆர்வமும், ஒற்றுமை மனேபாவமும் மக்களிடையே வளர்ந்தன. மொழி அடிப்படையில் விரோதம் ஏற்படவில்லை. இயக்கத்தில் ஈடுபட்ட மக்களால் 'வாழிய செந்தமிழ்' என்ற பாரதியார் இயற்றிய தமிழ்ப் பாடலும், ''சாரே சஹான்சே அச்சா இந்தோஸ்தான் அமாரா'' என்ற இக்பாலின் பாடலும், ரவிந்திரநாத் தாகூர் இயற்றிய ''ஜனகணமன'' என்ற வங்காளிப்பாடலும் உற்சாகத்துடன் பாடப்பெற்றன.

இவ்வாறு எல்லா தேசிய இனமக்களும் ஒன்றிணைந்து போராடி சுதந்திரம் பெற்ற பிறகு, இன்றைக்கும் அந்த ஒற்றுமை அவசியமாயிருக்கிறது. இன்னும் உலகத்தில் ஏகாதிபத்தியங்கள் குறிப்பாக அமெரிக்க ஏகாதிபத்தியம்—நவீனக் காலனி ஆதிக்கத்தினை விடுதலை அடைந்த நாடுகளின் மீது திணிக்க முற்பட்டுக் கொண்டிருக்கும் காலம் இது. மேலும்

முழுமையான ஜனநாயகத்திற்காகவும், சோஷலிசத்திற்காகவும் இந்நாட்டு மக்களனைவரும் ஒன்று சேர்ந்து போராடினால் அந்த இலட்சியம் சுலபமாகவும், துரிதமாகவும் கைகூடும் என்பது தெளிவு.

சுதந்திரப் போராட்ட காலத்தில் உருவான இந்த ஒற்றுமை உறுதிப்பட்டு நீடிக்க வேண்டுமாயின், இந்நாட்டில் பல மொழிகளைப் பேசும் தேசிய இனங்களின் சம நிலை அங்கிகரிக்கப்படவேண்டும். மொழி, ஒரு தேசிய இனத்தின் முக்கியமானதோர் குணம்சமாகும் தம் மொழியின் மீது பற்று ஏற்படுவது இயற்கையானதோர் குணமாகும்.

எனவே, ஒவ்வொரு தேசிய இனத்தின் சம அந்தஸ்தை அங்கிகரிப்பது, இந்திய ஒற்றுமைக்கு இன்றியமையாததாகும்.

மேலும் நாட்டின் முழுமையான வளர்ச்சிக்கு-அரசியல், பொருளாதாரம், விஞ்ஞானம், சமூகம், இலக்கியம், ஆகிய எல்லாத் துறைகளிலும் வளர்ச்சியடைவதற்கு—மொழி இன்றியமையாததொரு கருவியாகும். நாட்டில் இத்துறைகளிலெல்லாம்பங்கெடுத்துக்கொள்வது என்பது இந்த சகலத் துறைகளிலும் நடக்கும் அலுவல்கள் எல்லாம் அவர்களுக்குப் புரியும் பழக்கப்பட்ட மொழிகளில் நடைபெற்றால்தான் சாத்தியம். அதுதான் ஜனநாயகத்தின் அடித்தளம்.

இந்திய அரசியல் சட்டத்தை வகுத்ததில் முக்கியமான நிர்ணயமான பங்கு காங்கிரஸ் கட்சிக்குத்தான் உண்டு. காங்கிரஸ்காரர்களின் ஆதிக்கத்தில் இருந்த அந்த அரசியல் நிர்ணய சபையோ, இந்தக் கோட்பாடுகளை எல்லாம் புறக்கணித்தது. விடுதலை இயக்கம் ஏற்றுக் கொண்டுள்ள கோட்பாடுகளையும் புறக்கணித்தது.

மொழிவழி மாநிலக் கோரிக்கையைக் கூட அரசியல் சட்டம் ஏற்கவில்லை. மாறாக, மத்திய சர்க்கார் இக்கோரிக்கையை ஏற்கும்படிச் செய்ய 20 ஆண்டுகள் வரையில் மக்கள் போராட வேண்டி வந்தது; அப்போராட்டத்தில் எத்தனை உயிர்கள் துப்பாக்கிச் சூட்டுக்கு பலியாக வேண்டி வந்தது!

இந்திய யூனியன் இந்தி பேசுபவர்களுக்காக மட்டும் ஏற்பட்டதா? அதற்குக்கிடைக்கும் வருமானம் இந்திபேசும் மாநிலங்களிலிருந்துமட்டுமா கிடைக்கிறது? இந்தியாபூரா விலிருந்துதானே கிடைக்கிறது? அந்த வருமானத்திலிருந்து, இந்தியைமட்டும் வளர்க்க அது கடமைப்பட்டிருப்பதாக அரசியல் சட்டம் கூறுவானேன்? ஏனைய மொழிகளுக்கும், அம்மொழிகளைப் பேசும் மக்களுக்கும் ஓரவஞ்சனையல்லவா இது?

சுருங்கக்கூறினால், இந்தி பேசாத மக்களின்மீது இந்தியை நிர்ப்பந்தமாகத் திணித்து, மற்ற மொழிகளின் வளர்ச்சியைத் தடைப்படுத்தி, இந்தியைமட்டும் வளர்ப்பதற்கான ஏற்பாடு இது:

இத்தகைய ஏற்பாட்டினால், மோதல்கள் ஏற்படாமலிருக்க முடியுமா?

# இது ஜனநாயகமா?

இந்த ஏற்பாட்டிற்கும் ஜனநாயகத்துக்கும் ஏதாவது சம்பந்தமுண்டா? சட்டங்கள் இயற்றப்படுவதும், சர்க்கார் உத்தரவுகள் பிறப்பிக்கப்படுவதும் மக்களுக்காக. ஆனல் இவைகள் ஆங்கிலத்தில், இருக்குமானல் மக்களுக்கு அச்சட்டங்களையும், உத்தரவுகளையும் அறிந்துகொள்ளும் வாய்ப்பே இல்லாதுபோகிறது. அப்படியிருக்க, அந்தச் சட்டங்களுக்கும், உத்தரவுகளுக்கும் உட்பட்டு அவர்கள் நடக்கவேண்டும் எனக்கோரப்படுகிறது. இதனல் அதிகார வர்க்கம் சட்டத்தின்பேரால் எதேச்சாதிகாரமாக தன்னிஷ்டம் போல் நடந்து மக்களை அடக்கி ஒடுக்க நல்லதோர் வாய்ப்புக்கிடைக்கிறது. இது ஜனநாயகமாகுமா?

நீதிமன்ற நடவடிக்கைகளும் அப்படியே. குற்றம் சாட்டப்பட்டவனுக்கோ, அல்லது வழக்கில் சம்பந்தப்பட்டவர்களுக்கோ அந்த நடவடிக்கைகளைப் புரிந்துகொள்ளமுடியாது. இத்தகைய நிலையை எந்த சுதந்திரநாட்டிலும் காணமுடியாது!

ஆங்கிலத்திற்கு பதில், இந்தியிலிருந்தாலும் இதே நிலைதான் நாட்டு மக்களில் பெரும்பான்மையானவர்களுக்கு ஏற்படும்.

நாடாளுமன்ற நடவடிக்கைகளை எடுத்துக்கொள்வோம். அங்கு உபயோகிப்பதற்கு, ஆங்கிலம், இந்தி ஆகிய இரு மொழிகளே அரசியல் சட்டத்தில் இடம் பெற்றிருக்கின்றன. இந்த இரு மொழிகளில்மட்டும் நாடாளுமன்ற நடவடிக்கைகள் இருப்பதால், ஆங்கிலமும் இந்தியும் தெரியாத நாடாளுமன்ற உறுப்பினர்கள் அங்கு நடைபெறும் விவாதத்தில் பங்கெடுத்துக்கொள்வது இயலாதுபோய்விடுகிறது.

இது குறித்து உறுதியான போராட்டத்திற்குப்பிறகு இன்று நாடாளுமன்றத்தில் எந்தமொழியிலும் பேச சபாநாயகர் அனுமதி வழங்கியுள்ளார். ஆயினும் இந்தி, ஆங்கிலம் ஆகிய இருமொழிகளில் மட்டும் மொழிபெயர்ப்புக்கு ஏற்பாடுகள் உண்டு. எனவே இவ்விருமொழிகளைத் தவிர வேறு எந்த மொழியில் ஒரு உறுப்பினர் பேசினல்,

மற்ற மொழிகளைப் பேசும் பெரும்பான்மையான உறுப்பினர்களுக்கு அவர் பேசுவது புரியாது.

நாடாளுமன்றம் என்றால் ஒவ்வொரு விஷயத்திலும் கருத்துக்களைப் பரிமாறிக்கொண்டு முடிவு எடுக்கவேண்டுமல்லவா? ஒருவர் பேசுவதை மற்றவர்கள் புரிந்துகொள்வதற்கே முடியாத நிலையில் கருத்துப் பரிமாற்றத்திற்கு இடம் எங்கே?

அரசியல் சட்டம் அளித்துள்ள 'ஜனநாயக'த்தின் லட்சணம் இது.

சகல தேசீய மொழிகளின் சம அந்தஸ்து, ஜனநாயக வளர்ச்சியின் தேவைகள், நாட்டு வளர்ச்சியின் தேவைகள், இந்நாட்டு மொழிகளின் வளர்ச்சியின் தேவைகள் ஆகியவற்றைக் கணக்கிலெடுத்துக்கொண்டு, இவைகளின் அடிப்படையில்தான் மொழிப்பிரச்சினைக்குத் தீர்வுகாணமுடியும். இவைகள் ஒன்றுக்கொன்று முரணானவை அல்ல; மாறாக ஒன்றோடொன்று இணைந்து நிற்கின்றன என்பதைமேலே காண்போம்.

இந்தக் கண்ணோட்டத்துடன் 23—1—68-ம் தேதியில் தமிழ்நாடு சட்டமன்றத்தில் மொழிப்பிரச்சினை சம்பந்தமாக நடந்த விவாதத்தில் கம்யூனிஸ்டுக் கட்சி (மார்க்ஸிஸ்டு) உறுப்பினர் தோழர் ஏ. பாலசுப்ரமணியம் சர்க்கார் தீர்மானத்திற்கு கீழ்க்கண்ட திருத்தத்தைப் பிரேரேபித்தார்.

## தமிழக அரசினரின் மொழி தீர்மானத்துக்கு கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) திருத்தம்

"நிலைமையை பரிசீலித்த பிறகு, ஜனநாயகத்தை வளர்ப்பதற்கும், நாட்டின் அரசியல், பொருளாதார, சமூக, கலாச்சார வளர்ச்சிக்கும், மொழி ஒரு சாதனமாக இருக்க வேண்டும் என்ற நோக்குடன் அணுகினால்தான் மொழிப்பிரச்

சினைக்குத் தீர்வுகாண இயலும் என்று இச்சபை கருதுகிறது. மேலும், தொடர்ந்த பிரதேசத்தில் தங்களுக்கே உரித்தான பழக்கங்களையும் பண்பையும் கொண்ட பல்வேறு மொழிகளைப் பேசும் மக்களைக்கொண்ட இந்நாட்டில் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நடந்த சுதந்திரப் போராட்டத்தில் உருவானநாட்டின் ஒற்றுமையை பேணிப்பாதுகாத்து மேலும் கெட்டிப்படுத்துவதற்கு, இந்நாட்டில் வழங்கும் எல்லா மொழிகளுக்கும் சம அந்தஸ்தை எல்லா மட்டங்களிலும் நல்குவது அத்தியாவசியம் என்பது இச்சபையின் திடமான கருத்து.

இதற்காக வேண்டி, கீழ்க்கண்ட நடவடிக்கைகளை மத்திய மாநில அரசுகள் மேற்கொள்ள வேண்டும் என்று இச்சபை வற்புறுத்துகிறது.

1. அரசியல் சட்டத்தில் இந்திக்கு தனி அந்தஸ்து அளித்திருப்பது அகற்றப்பட்டு, நாட்டின் பிறமொழிகளுக்கு கீழ்நிலை அளிக்கும் சட்டப்பிரிவுகளெல்லாம், எல்லா இந்திய மொழிகளுக்கும் சம நிலை நல்கும் வகையில் திருத்தப்படவேண்டும்.

2. அரசியல் சட்டத்தின் 8-வது பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள மொழிகள் அனைத்தும் மத்திய அரசினர் மொழிகளாக அங்கீகரிக்கப்படவேண்டும்.

3. நாடாளுமன்றத்தில் நடவடிக்கைகள், அரசியல் சட்டத்தின் 8-வது பட்டியலில் உள்ள மொழிகளில் நடப்பதற்கும், ஏககாலத்தில் மொழி பெயர்ப்புக்கும் ஏற்பாடும் செய்ய வேண்டும்.

4. மத்திய சர்க்காரின் மசோதாக்கள், சட்டங்கள், உத்திரவுகள் போன்றவையெல்லாம் 8-வது பட்டியலில் குறிப்பிட்டுள்ள எல்லா மொழிகளிலும் பிரசுரிக்கப்பட வேண்டும்.

5. மத்திய அரசின் பணிமனைகள் இருக்கும் மாநிலங்களில், அந்தந்த மாநிலமொழியிலேயே மக்களுடன் தொடர்பு வைத்துப் பணியாற்ற வேண்டும்.

6. மாநில அரசுகள் மத்திய அரசுக்கு தத்தம் மாநில மொழியிலேயே கடிதம் எழுதுவதற்கும், அம்மொழியிலேயே பதில் பெறுவதற்கும் உரிமை வழங்கப்பட வேண்டும்.

7. ஒவ்வொரு பிரஜைக்கும் தன் தாய்மொழியில் மத்திய அரசுக்குக் கடிதம் எழுதுவதற்கும், பதில் பெறுவதற்கும் உரிமை வழங்கப்படவேண்டும்.

8. 8-வது பட்டியலில் குறிப்பிட்டுள்ள எல்லா மொழிகளின் வளர்ச்சிக்கும், மத்திய அரசு சமமாக நிதி வசதிகளை வழங்க வேண்டும்.

9. எல்லா மாநிலங்களிலும் கல்வி நிலையங்களில் உயர் மட்டம் வரையிலும் அந்தந்த மாநிலத்து மொழியே பயிற்சி மொழியாக இருக்கவேண்டும்.

10. அதே போன்று அந்தந்த மாநிலத்துமொழியே மாநிலங்களில் நிர்வாக மொழியாகவும், உயர்நீதி மன்றம் வரை நீதிமொழியாகவும் இருக்கவேண்டும்.

இவையாவும் அடுத்த ஐந்து ஆண்டுகளுக்குள் முழுமையாக அமுலாக துரித நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும்.

11. மொழிவழி சிறுபான்மையினருக்கு உயர் தொடக்க கல்வி வரை தங்கள் தாய்மொழியிலேயே கல்வி பயில்வதற்கு உத்திரவாதம் அளிக்கப்படவேண்டும்.

12. மும்மொழித் திட்டம் என்பது பயனற்றது நடைமுறைச் சாத்திய மற்றது என்பதனை அனுபவம் தெளிவாக்கி விட்டது. மீண்டும் அதை வற்புறுத்துவது பயனற்றது.

13. அதேசமயத்தில் உயர்நிலைப்பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், தாய்மொழியைத்தவிர இதர இந்திய மொழிகளையும், ஆங்கிலம் அல்லது வேறு நவீன மொழிகளேயும் மாணவர்கள் இஷ்டப்பூர்வமாகக் கற்பதற்கு வசதிகள் அளிக்கப்பட வேண்டும்.

இத்தகைய ஏற்பாடுகள் செய்து முடித்தபிறகு, இந்திய மக்கள், ஏதாவது ஒரு இந்திய மொழியை குரோத மனப்பான்மையும், வெறுப்புணர்ச்சியும் இல்லாமல் நடைமுறை சாத்தியத்தையும் பயனையும் மட்டும் அடிப்படையாகக் கொண்டு தேர்ந்தெடுத்துக்கொள்வதற்கான சுமுகமான நிலை ஏற்படும் என்று இச்சபை கருதுகிறது.

நாடாளுமன்றத்தில் அண்மையில் நிறைவேற்றப்பெற்ற அரசினர் மொழித் திருத்த சட்டம், இந்தி பேசாத மாநிலங்கள் விரும்பும்வரை ஆங்கிலமும் மத்திய அரசின் மொழியாக இருக்கும் என்பதனை ஏற்றுக்கொண்டபோதிலும், அச்சட்டத்தில் 3-வது பிரிவில் (4)-வது உட்பிரிவு மத்திய அரசின் ஒரு இலாகாவில் அல்லது பகுதியில் இந்தியை ஏக அலுவல்மொழியாக சர்க்காருக்கு அதிகாரம் அளித்திருக்கிறது. இவ்வதிகாரம் உடனடியாக ரத்து செய்யப்பட வேண்டும்.

மேலும் இதனோடுகூட நாடாளுமன்றம் நிறைவேற்றிய தீர்மானத்தில் மத்திய சர்க்காரில் உத்தியோகத்திற்குச் சேருவதற்கு இந்தி அல்லது ஆங்கிலத்தில் ஞானம் இருக்க வேண்டும் என்று கூறுவது இந்தி பேசாத மக்களின் மீது அதிகமான பளுவைச் சுமத்துகிறது. இந்த ஏற்றத்தாழ்வை இச்சபை நிராகரிக்கிறது.

எனவே, மத்திய சர்க்காரில் உத்தியோகத்திற்கு சேர்வதற்கு அரசியல் சட்டத்தின் 8-வது பட்டியலில் குறிப்பிட்டுள்ளமொழிகள், ஆங்கிலம் ஆகியவற்றில் ஏதாவது ஒரு மொழியில் ஞானம் இருந்தால்போதும் என்பதை மத்திய அரசு ஏற்கவேண்டும்.

இந்த வகையில் மொழிப்பிரச்சினைக்கு தீர்வு காணுமல், இந்திக்கு அளிக்கப்பட்டுள்ள பிரத்தியேக அந்தஸ்தை

நீடிப்பதற்காகச் செய்யப்படும் முயற்சிகளும் ஆங்கிலத்திற்கு பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் கல்வி, நீதி நிர்வாகம் ஆகிய துறைகளில் இருந்த ஸ்தானத்தை நீடிப்பதற்காகச் செய்யப் படும் முயற்சிகளும் நாட்டின் ஒற்றுமையைச் சீர்குலைக்கும் என்று இச்சபை கருதுகிறது.''

இந்தத் திருத்தத்தை விளக்க வேண்டிய அவசியமில்லை. இதில் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 10 ஆகிய பிரிவுகள் எல்லா மொழிகளுக்கும் சம நிலையை உத்திரவாதப்படுத்துவ தோடு, சகல மக்களும் நாட்டின் அரசியல், பொருளாதார வளர்ச்சியில் பங்கெடுத்துக்கொள்வதற்கே வாய்ப்பை அளிக்கின்றன.

திருத்தத்தின் 9, 11, 12, 13 பிரிவுகள் கல்வி சம்பந்த மானவை. தத்தம் மாநில மொழியை உயர்மட்டக்கல்வி வரையில் பயிற்சி மொழியாக்காவிடில், திருத்தத்தின் இதரப்பிரிவுகளில் கூறியவற்றை முழுமையாக நிறைவேற்ற வேண்டுமென்று நாம் வற்புறுத்துகிறோம்.

ஸ்விட்சர்லாந்தில் இத்தாலியன், ஜெர்மென், பிரெஞ்சு ஆகிய மூன்று மொழிகளும் ஆட்சிமொழிகளாக இருக் கின்றன. சின்னஞ்சிறிய சிங்கப்பூரில் தமிழ், மலாய், சீனம், ஆங்கிலம் ஆகிய நான்கு மொழிகளும் ஆட்சிமொழிகளாக உள்ளன. இது சாத்தியமென்றால், இந்தப் பரந்த இந்தியா வில் இங்கு வழங்கும் மொழிகளெல்லாம் ஏன் ஆட்சிமொழி களாக இருக்கக்கூடாது? அவைகளில் ஒருமொழிக்கு எதற் காக பிரத்தியேக அந்தஸ்தும், விசேஷச் சலுகையும் அளிக்க வேண்டும்?

13. அதேசமயத்தில் உயர்நிலைப்பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், தாய்மொழியைத்தவிர இதர இந்திய மொழிகளையும், ஆங்கிலம் அல்லது வேறு நவீன மொழிகளையும் மாணவர்கள் இஷ்டப்பூர்வமாகக் கற்பதற்கு வசதிகள் அளிக்கப்பட வேண்டும்.

இத்தகைய ஏற்பாடுகள் செய்து முடித்தபிறகு, இந்திய மக்கள், ஏதாவது ஒரு இந்திய மொழியை குரோத மனப்பான்மையும், வெறுப்புணர்ச்சியும் இல்லாமல் நடைமுறை சாத்தியத்தையும் பயனையும் மட்டும் அடிப்படையாகக் கொண்டு தேர்ந்தெடுத்துக்கொள்வதற்கான சுமுகமான நிலை ஏற்படும் என்று இச்சபை கருதுகிறது.

நாடாளுமன்றத்தில் அண்மையில் நிறைவேற்றப்பெற்ற அரசினர் மொழித் திருத்த சட்டம், இந்தி பேசாத மாநிலங்கள் விரும்பும்வரை ஆங்கிலமும் மத்திய அரசின் மொழியாக இருக்கும் என்பதனை ஏற்றுக்கொண்டபோதிலும், அச்சட்டத்தில் 3-வது பிரிவில் (4)-வது உட்பிரிவு மத்திய அரசின் ஒரு இலாகாவில் அல்லது பகுதியில் இந்தியை ஏக அலுவல்மொழியாக சர்க்காருக்கு அதிகாரம் அளித்திருக்கிறது. இவ்வதிகாரம் உடனடியாக ரத்து செய்யப்பட வேண்டும்.

மேலும் இதனோடுகூட நாடாளுமன்றம் நிறைவேற்றிய தீர்மானத்தில் மத்திய சர்க்காரில் உத்தியோகத்திற்குச் சேருவதற்கு இந்தி அல்லது ஆங்கிலத்தில் ஞானம் இருக்க வேண்டும் என்று கூறுவது இந்தி பேசாத மக்களின் மீது அதிகமான பளுவைச் சுமத்துகிறது. இந்த ஏற்றத்தாழ்வை இச்சபை நிராகரிக்கிறது.

எனவே, மத்திய சர்க்காரில் உத்தியோகத்திற்கு சேர்வதற்கு அரசியல் சட்டத்தின் 8-வது பட்டியலில் குறிப்பிட்டுள்ளமொழிகள், ஆங்கிலம் ஆகியவற்றில் ஏதாவது ஒரு மொழியில் ஞானம் இருந்தால்போதும் என்பதை மத்திய அரசு ஏற்கவேண்டும்.

இந்த வகையில் மொழிப்பிரச்சினைக்கு தீர்வு காணமல், இந்திக்கு அளிக்கப்பட்டுள்ள பிரத்தியேக அந்தஸ்தை

நீடிப்பதற்காகச் செய்யப்படும் முயற்சிகளும் ஆங்கிலத்திற்கு பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் கல்வி, நீதி நிர்வாகம் ஆகிய துறைகளில் இருந்த ஸ்தானத்தை நீடிப்பதற்காகச் செய்யப் படும் முயற்சிகளும் நாட்டின் ஒற்றுமையைச் சீர்குலைக்கும் என்று இச்சபை கருதுகிறது.''

இந்தத் திருத்தத்தை விளக்க வேண்டிய அவசியமில்லை. இதில் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 10 ஆகிய பிரிவுகள் எல்லா மொழிகளுக்கும் சம நிலையை உத்திரவாதப்படுத்துவ தோடு, சகல மக்களும் நாட்டின் அரசியல், பொருளாதார வளர்ச்சியில் பங்கெடுத்துக்கொள்வதற்கே வாய்ப்பை அளிக்கின்றன.

திருத்தத்தின் 9, 11, 12, 13 பிரிவுகள் கல்வி சம்பந்த மானவை. தத்தம் மாநில மொழியை உயர்மட்டக்கல்வி வரையில் பயிற்சி மொழியாக்காவிடில், திருத்தத்தின் இதரப்பிரிவுகளில் கூறியவற்றை முழுமையாக நிறைவேற்ற வேண்டுமென்று நாம் வற்புறுத்துகிறோம்.

ஸ்விட்சர்லாந்தில் இத்தாலியன், ஜெர்மென், பிரெஞ்சு ஆகிய மூன்று மொழிகளும் ஆட்சிமொழிகளாக இருக் கின்றன. சின்னஞ்சிறிய சிங்கப்பூரில் தமிழ், மலாய், சீனம், ஆங்கிலம் ஆகிய நான்கு மொழிகளும் ஆட்சிமொழிகளாக உள்ளன. இது சாத்தியமென்றால், இந்தப் பரந்த இந்தியா வில் இங்கு வழங்கும் மொழிகளெல்லாம் ஏன் ஆட்சிமொழி களாக இருக்கக்கூடாது? அவைகளில் ஒருமொழிக்கு எதற் காக பிரத்தியேக அந்தஸ்தும், விசேஷச் சலுகையும் அளிக்க வேண்டும்?

# லெனின் காட்டிய வழி

மொழிப்பிரச்சினை குறித்து லெனின் எழுதியதை கீழே தந்துள்ளோம். ஜார் மன்னர் ஆட்சி செய்த காலத்தில் ரஷ்ய சாம்ராஜ்யத்தில் ரஷ்ய தேசீய இனம் மிகப்பெரிய இனமாகவும், சாம்ராஜ்யத்தின் ஜனத்தொகையில் மிகப் பெரும்பான்மை மக்களைக் கொண்டதாகவும் இருந்தது. சாம்ராஜ்யத்தின் எல்லையோரத்தில் பல்வேறு தேசிய இனங்கள் இருந்தன. அவைகளின் மொழிகளும் வெவ் வேறானவை.

ரஷ்யமொழியோ மிகவும் வளர்ச்சிடைந்திருந்தது. மற்றமொழிகள் மிகவும் பின் தங்கியிருந்தன.

மொழி சம்பந்தமாக அங்கேயும் இந்தியாவில்போன்று வாதாடியவர்களுக்குக் குறைவில்லை. 'லிபரல்' கட்சிப் பத்திரிகை ஒன்று, "ரஷ்யாவைப்போன்ற பரந்த மாபெரும் நாட்டில், ஒரு ஏக ஆட்சிமொழி இருக்கவேண்டும் என்பதை யும் ரஷ்ய மொழியே இந்த ஆட்சிமொழியாக இருக்க முடியும்; இதை யாரும் மறுக்கமுடியாது" என்றும் எழுதியது. இதற்கு பதிலளித்து லெனின் கூறினர்:

"ஒரே ஒரு மொழியை ஆட்சிமொழியாகக் கொள்ளா மல், மூன்று ஜெர்மன், பிரெஞ்சு, இத்தாலியன்—மொழிகளை ஆட்சிமொழிகளாகக் கொண்டதனல் சின்னஞ்சிறு ஸ்விட்சர் லாந்துக்கு நஷ்டம் ஒன்றும் ஏற்படவில்லை. மாருக லாபமே ஏற்பட்டுள்ளது. ஸ்விட்சர்லாந்தில் 70 சதவிகித மக்கள் ஜெர்மானியர்கள் (ரஷ்யாவில் 43 சதம் ரஷ்யர்கள்); 22 சதவிகிதம் பிரெஞ்சு மொழிபேசுபவர்கள் (ரஷ்யாவிலோ (17 சதம் உக்ரேனியர்கள்) இத்தாலி மொழிபேசுபவர்கள் 17 சதம். 6 சதம் போலிஷ் மொழி பேசுபவர்கள் (4.5சதமானம் வெள்ளை ரஷ்யர்கள்) ஸ்விட்சர்லாந்தின் பார்லிமெண்டில் இத்தாலிய மொழி பேசுவோர் அடிக்கடி பிரெஞ்சு மொழி யிலேயே பேசுகின்றனர். இதற்குக்காரணம், ஒரு காட்டு

மிராண்டிச் சட்டத்தினால் அச்சுறுத்தப்படுவதல்ல (அப்படி யொரு சட்டம் ஸ்விட்சர்லாந்தில் இல்லை) ஆனால், ஒரு ஜனநாயக அரசில் வாழும் ஒரு நாகரிகப்பிரஜை, பெரும் பான்மை மக்கள் புரிந்துகொள்ளும் மொழியை விரும்புவதே இதற்குக் காரணம். பிரெஞ்சு மொழி இத்தாலிய மக்களின் உள்ளத்தில் வெறுப்பை உண்டாக்கவில்லை. ஏனெனில் அது ஒரு சுதந்திரமான நாகரீக நாட்டின் மொழி; அருவருப் பளிக்கும் போலீஸ் நடவடிக்கைகள் மூலம் அம்மொழியே சாத மக்களின் மீது திணிக்கப்பட்ட மொழியல்ல.

“ஸ்விட்சர்லாந்தைக் காட்டிலும் வேற்றுமைகளைக் கொண்ட, பயங்கரமான அளவு பின்தங்கியுள்ள இந்தப் பிரும்மாண்டமான ரஷ்யா, ஒரு மொழிக்கு ஏதாவது ஒரு சலுகையை நீடித்துத் தன்னுடைய வளர்ச்சியை ஏன் கட்டுப் படுத்தவேண்டும்? இதற்குமாறானதுவல்லவோ உண்மை? ரஷ்யா, (வளர்ச்சியில்) ஐரோப்பாவைப் பிடிக்கவேண்டு மானால், எல்லாவிதச் சலுகைகளுக்கும் முற்றுப்புள்ளிவைக்க வேண்டாமா? எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு வேகமாக, அவ்வளவு முழுமையாக, அவ்வளவு துடிதுடிப்புடன், சலுகை களுக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டாமா?”

இது எழுதப்பட்டது 1914-ம் ஆண்டு ஜனவரி 1-ம் தேதி. இதே விஷயத்தைப்பற்றி மீண்டும் ஜனவரி 18-ம் நாளன்று லெனின் எழுதினர்.

“கட்டாய ஆட்சிமொழி என்றால் என்ன? நடைமுறை யில், ரஷ்யாவின் ஜனத்தொகையில் சிறுபான்மையாக உள்ள ரஷ்யர்களின் மொழி, ரஷ்யாவின் இதர மக்களின் மீது சுமத் தப்படுவது என்பதுதான் இதன் பொருள். ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் ஆட்சிமொழியை போதிப்பது கட்டாய மாக இருக்கும். அரசின் கடிதப்போக்குவரத்தெல்லாம் அந்த ஆட்சிமொழியிலேயே நடத்தவேண்டும்; ஸ்தலத்தி லுள்ள மக்களின் மொழியிலல்ல.

“லிபரல் கட்சியினர் கூறும் வாதம் இன்னும் ‘பண்புடை யது’ “நாசூக்கானது.” ஒரு வரம்புக்குள் தேசிய மொழிகளை உபயோகிப்பதை அனுமதிக்க அவர்கள் விரும்புகின்றனர்.

(உதாரணமாக ஆரம்பப்பள்ளிக்கூடங்களில்) அதே சமயத்தில் ஒரு கட்டாய ஆட்சிமொழி வேண்டும் என்று அவர்கள் வாதிக்கின்றனர். ''பண்பாட்டிற்காக'', ''ஒன்றுபட்ட'' ''பிரிக்கமுடியாத'' ரஷ்யாவின் தேவைகளுக்கு அது அவசியம் என்று அவர்கள் கூறுகின்றனர்.

''......அரசின் பண்பிற்கு ஒரு ஆட்சிமொழி அத்தியாவசியமான பாகமாகும்... அரசு என்பது ஒற்றுமைப் படுத்தப்பட்ட அதிகாரத்தின் அடிப்படையில் அமைந்துள்ளது. அந்த ஒற்றுமையின் ஓர் கருவி ஆட்சிமொழி......

'ரஷ்யா ஒற்றுமைப்பட்டு, பிரிக்கமுடியாததாயிருக்க வேண்டுமாயின், ரஷ்ய மொழியின் அரசியல் அவசியத்தை நாம் திடமாக வற்புறுத்தவேண்டும்'—என்கின்றனர்

''ஒரு ஏக ஆட்சிமொழியின் அவசியத்தைப்பற்றி வற்புறுத்தும் லிபரல் கட்சியினர் தத்துவார்த்தத்துக்கு இது ஒரு மாதிரி.

''ரஷ்ய மொழி மகத்தானதோர் மொழி; வலிமைமிக்க மொழி. ரஷ்யாவின் எல்லைப்பகுதிகளில் வசிக்கும் ஒவ்வொருவரும் இந்த மகத்தான வலிமைமிக்க மொழியை அறிந்திருக்கவேண்டுமென்று நீங்கள் விரும்பவில்லையா? ரஷ்ய மொழி, மற்ற மொழிகளை வளம்மிக்கவையாக்கும்; அவர்களிடம் கலைச்செல்வங்களை கொண்டு சேர்க்கும். இவைகளையெல்லாம் நீங்கள் உணர்வதில்லையா? என்று நம்மை லிபரல்கள் கேட்கின்றனர்.

''நாம் இந்த லிபரல்களுக்கு பதில் கூறுகிறோம். கனவான்களே! இதெல்லாம் உண்மை. துர்ஜனேவ், டால்ஸ்டாய், தோப்ரோலியூபோவ், ஷெர்னிஷெவ்ஸ்கி, ஆகியோர் எழுதியமொழி சாலச்சிறந்தது, வலிமைமிக்கது என்பதை உங்களைக்காட்டிலும் நாங்கள் நன்கறிவோம். ரஷ்யாவில் வாழும் எல்லா தேசிய இனங்களிலும் உள்ள ஒடுக்கப்பட்ட வர்க்கங்களிடையே சாத்தியமான அளவு நெருக்கமான தொடர்புகளும், சகோதர ஒற்றுமையும் ஏற்படவேண்டும்

என்று உங்களைக்காட்டிலும் நாங்கள் அதிகமாக விரும்புகிறோம். ரஷ்யாவில் வாழும் ஒவ்வொரு மகனுக்கும், இந்தச் சிறப்பான ரஷ்ய மொழியைக் கற்கச் சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும் என்பதை நாங்கள் ஆதரிக்கிறோம்.

''நாம் விரும்பாதது பலாத்காரம், நிர்ப்பந்தம், கட்டாயம். இதில் எள்ளளவையும் நாம் விரும்பவில்லை. தடியைக் கொண்டு மக்கள் சுவர்க்கத்திற்கு விரட்டப்படுவதை நாம் விரும்பவில்லை. 'கலை, பண்பாடு' என்று எவ்வளவு நாசூக்கான சொற்களை நீங்கள் உபயோகித்தாலும், கட்டாய ஆட்சிமொழி என்றாலே அதில் நிர்ப்பந்தம், பலாத்காரம், தடிப்பிரயோகம் அடங்கியிருக்கிறது. பலவந்தமாகக் கட்டாயப்படுத்தபட்டு அதை யாரும் கற்கவேண்டுமென்ற தேவை இச்சிறந்த, வலிமைமிக்க ரஷ்ய மொழிக்கு இருப்பதாக நாம் கருதவில்லை. ரஷ்யாவில் முதலாளித்துவம் வளர்வதும், சமூக வாழ்க்கையின் வளர்ச்சிப்போக்கு பூராவும் எல்லா தேசிய இனங்களையும் நெருக்கத்தில் கொண்டு வருகின்றன என்பதை நாங்கள் நன்கு தெரிந்திருக்கிறோம். லட்சக்கணக்கான மக்கள் ரஷ்யாவின் ஒரு கோடியிலிருந்து மறுகோடிக்குப் போய்க்கொண்டும் வந்து கொண்டுமிருக்கின்றனர். பல்வேறு தேசிய இனங்களைச் சேர்ந்த மக்கள் உறவாடுகின்றனர். இதனால் தனித் தன்மையும், தேசிய இனங்களின் மாருத தன்மையும் மறையத்தான் செய்யும். வாழ்க்கை நிலைகள், தொழில் நிலைகள் ஆகியவற்றின் காரணமாக யார் யாருக்கு ரஷ்ய மொழியைக் கற்பது தேவைப் படுகிறதோ, அவர்கள் அதை, வலுக் கட்டாயப் படுத்தாமலே கற்பார்கள். ஆனால் பலவந்தம், (சாட்டையடி) ஒரே ஒரு விளைவைத்தான் உண்டாக்கும். சிறப்பான வலிமைமிக்க ரஷ்ய மொழி மற்ற தேசிய இனங்களிடையே பரவுவதற்கு அது தடங்கல்களை ஏற்படுத்தும். எல்லாவற்றைக் காட்டிலும் மிகவும் முக்கியமானதென்னவென்றால், விரோதங்களை அது கூர்மையாக்கும்; லட்சக்கணக்கான புதிய உருவங்களில் மோதல்களை உண்டாக்கும். ஆத்திரத்தை, பரஸ்பர அவநம்பிக்கையை அதிகரிக்கும்.

''இத்தகைய நிலையை யார் விரும்புவார்கள்? ரஷ்ய மக்களல்ல; ரஷ்ய ஜனநாயகவாதிகளல்ல. ஒரு தேசிய இனம் மற்றொரு இனத்தினால் எந்த வடிவத்திலும் ஒடுக்கப்படுவதை

அவர்கள் ஏற்கவில்லை. 'ரஷ்யப் பண்பாடு, ரஷ்ய அரசு ஆகியவற்றின் நலனுக்காக''க்கூட இதை அவர்கள் ஏற்கவில்லை.

''அதனால்தான் கட்டாயமான ஏக ஆட்சிமொழி என்பது கூடாது என்று ரஷ்ய மார்க்ஸிஸ்டுகள் கூறுகின்றனர். அனைத்து ஸ்தல மொழிகளிலும் போதிக்கும் பள்ளிக் கூடங்கள் நிறுவப்பட வேண்டும்; ஏதாவதொரு தேசிய குணத்திற்கு உள்ள சகலபிரத்தியேகச் சலுகைகளும் சட்ட விரோதமானவை என்றும், தேசிய மைனரிட்டியாரின் உரிமைகளுக்கு பங்கம் விளைவிப்பவை எல்லாம் சட்ட விரோதமானவை என்றும் முழங்கி அடிப்படையானதோர் சட்ட பிரிவு அரசியல் சட்டத்திலேயே எழுதப்படவேண்டும் என்று மார்க்ஸிஸ்டுகள் கூறுகின்றனர்.''

பல தேசிய இனங்களை ஒன்று படுத்துவதிலும், பல மொழிகள் பேசிய நாட்டில் அவைகளிடையே சுமுக உறவை ஏற்படுத்தியதிலும் மகத்தான வெற்றிகண்ட லெனின் காட்டும் வழி இது.

ஒரு மொழி பேசும் மக்களை மற்றொரு மொழியை கற்றுக் கொள்ள நிர்ப்பந்தப்படுத்தக்கூடாது என்பதே அந்த வழி. சகல மொழிகளுக்கும் சமத்துவம் அளிக்கப்படவேண்டுமென்பதே லெனின் காட்டிய வழி. ஒரு நாட்டின் ஒற்றுமையை பாதுகாப்பதில் வெற்றிகண்ட வழி இதுவே.

# இது ஜனநாயகப் பிரச்சினை

மொழிப் பிரச்சினை, ஜனநாயகம், தேசிய இனங்களின் சமத்துவம் என்ற பொருள்களோடு சம்பந்தப்பட்டிருப்பது போலவே, கல்வி பயிற்றுவிப்பதற்கு இன்றியமையாத போதனை மொழியோடும் சம்பந்தப்பட்டுள்ளது. உண்மையாகப் பார்த்தால், கல்லூரிகளில் போதனைமொழி ஒன்ருக இருக்குமானல், அரசின் அலுவல்களிலும், நீதிமன்றங்களிலும் வேருெரு மொழியைப் பயன்படுத்துவது இயலாது.

சுதந்திரம் பெற்ற 20 ஆண்டுகளுக்குப்பிறகு இன்னும் ஆங்கிலத்தில்தான் கல்லூரிகளில் போதிக்க வேண்டும் என்று நாட்டில் விவாதம் இருந்துவருவது விந்தையிலும் விந்தை. சுதந்திரப் போராட்டம் நடந்த காலத்திலேயே,-நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே தேசிய இயக்கம் முடிவு செய்துவிட்ட விஷயம் இது. நாடு கலை, விஞ்ஞானம், தொழில், பொருளாதாரம், முதலிய எல்லாத் துறையிலும் வளர்ச்சியடைய வேண்டுமாயின்-ஜனநாயகம் மலர வேண்டுமாயின்-தாய் மொழியில்தான்-ஆங்கிலத்தில் அல்ல-எல்லா மட்டங்களிலும் சகல இயல்களிலும் கல்வி பயிற்றுவிக்கப்பட வேண்டும் என்று அன்றே முடிவு செய்யபட்ட விஷயம் இது.

சுதந்திரம் பெற்றபிறகு கல்வி சம்பந்தமாகநிறுவப்பட்ட எல்லாக்கமிஷன்களும்—இக்கமிஷன்களில் அங்கம் வகித்தவர்களும் அரசியல்வாதிகள் அல்ல, மாருகக்கல்வித்துறையில்நிபுணர்கள் எனக் கருதப்பட்டவர்கள்—இதை ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். இறுதியாக நியமிக்கப்பட்ட கல்விக் கமிஷன் 1966-இல் தனது ரிப்போர்ட்டை சமர்ப்பித்தது. இந்தக் கமிஷனில், இந்தியக் கல்வி நிபுணர்கள் மட்டுமின்றி, அமெரிக்கா, பிரிட்டன், சோவியத் யூனியனின், ஜப்பான் ஆகிய நாடுகளைச் சேர்ந்தக் கல்வி நிபுணர்களும் அங்கம் வகித்தனர். இந்தக் கமிஷனும் உயர் மட்டம் வரையில் கல்வி தத்தம் பிரதேச மொழியிலேயே போதிக்கப்பட வேண்டும் என்பதனை ஏகமனதாகச் சிபாரிசு செய்திருக்கிறது.

ஆயினும், விஞ்ஞானம், பொறிஇயல், பொருள் இயல், முதலிய கலைகள் ஆங்கிலத்தில்தான் போதிக்க முடியும்; ஆங்கிலத்தைக் கைவிட்டால் இந்தியாவில் விஞ்ஞான வளர்ச்சியே ஏற்படாது; தொழில் நுட்பம் கிட்டாது; என்றென்றும் பின்தங்கிய நாடாக இருக்கும் என்று இன்னமும் பலமாகக் கூக்குரல் இருந்து வருகிறது.

இவ்வாண்டு ஜனவரி 3 முதல் 10 வரையில் சென்னை நகரில் இரண்டாவது உலகத் தமிழ் மாநாடு நடத்தப்பட்டது. தமிழ் மொழியின் தொன்மையைப்பற்றியும் இலக்கிய வளத்தைப் பற்றியும், 10 நாட்கள் பல அறிவுரைகள் வழங்கப்பட்டன.

## இன்றைய நிலை என்ன ?

ஆனால் பழம் பெருமைகளைப் பேசிய போதிலும் இன்று தமிழ் மொழியின் நிலை என்ன? எவ்வளவு செழுமை வாய்ந்த மொழியாயினும், இன்று நமது சமூகத்தின் சகல தேவைகளுக்கும், வளர்ச்சிக்கும் அம்மொழி பயன்படுத்தப்படாத நிலையில் இருக்கிறது என்பதுதானே இன்றுள்ள நிலை? ஏனெனில் சமூகம் இன்று வாழவேண்டுமாயின், அதற்கு விஞ்ஞானமும், பொருளியலும்,சர்க்காரின் சட்டங்களும் இன்றியமையாதவை. இவைகளை போதிக்கும் திறமை இன்று தமிழுக்கு இல்லை என்றால், இன்றைய சமூகத்திற்கு அது பயனற்ற நிலையில் இருக்கிறது என்பதுதானே அதன் பொருள்?

இதில் ஒரு விசேஷம் என்னவென்றால், தமிழின் பெருமையைப்பற்றியும், தமிழின் இலக்கியக் களஞ்சியங்களைப்பற்றியும், இம்மாநாட்டின் ஆராய்ச்சிக்கட்டுரைகளில் பெரும்பான்மையானவை ஆங்கிலத்தில் இருந்தன என்பதே! இவ்வுரைகளை நிகழ்த்தியவர்களில் சென்னை பல்கலைக்கழகத்தின் துணை வேந்தர் திருவாளர் ஏ. லட்சுமணசாமி முதலியாரும்ஒருவர். தமிழ், கல்லூரிகளில் பயிற்சி மொழியாக்கத் தகுதியற்றது என வன்மையாகக் கூறுபவர்களில் முன்னணியில் நிற்பவர் லட்சுமணசாமி முதலியார். அவர் உரையாற்றியதும் ஆங்கிலத்தில்தான் என்பதில் வியப்பொன்றுமில்லை.

இந்த மாநாட்டையொட்டி பல தமிழ்ப் பெரியார்களுக்குச் சிலைகள் எழுப்பப்பட்டன. அவர்களில் பாரதியும் ஒருவர். பாரதி இது சம்பந்தமாக என்ன கூறினர் என்பதைப் பார்ப்போம். தமிழ்த்தாய் தன் மக்களுக்குக் கூறியதாகக் கற்பனை செய்து பாரதி தமிழ் மக்களுக்கு உணர்த்திய பாட்டில் கூறுகிறர்:

“ கன்னிப்பருவத்தில் அந்நாள்—என்றன்
காதில் விழுந்ததிசை மொழியெல்லாம்

என்னென்னவோ பெயருண்டு—பின்னர்
யாவும் அழிவுற்றிறந்தன கண்டீர்!

“ தந்தை அருள்வலியாலும்—முன்பு
சான்ற புலவர் தவவலியாலும்

இந்தக் கணமட்டும் காலன்—என்னை
ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சியிருந்தான்.”

இது, அவர் இப்பாட்டு எழுதியவரை இருந்த தமிழின்நிலைமை. அதற்குப்பிறகு, பாரதி கூறுவதை கவனிப்போம்...

“ இன்றொரு சொல்லினைக் கேட்டேன்—இனி
ஏது செய்வேன்? எனதாருயிர் மக்காள்!

கொன்றிடல் போன்றொரு வார்த்தை—இங்குக்
கூறத்தகாதவள் கூறினள் கண்டீர்!”

என்னைக் கொன்றுவிடுவது போன்ற ஒரு வார்த்தையை கூறத்தகாதவள் கூறிவிட்டாள். இனி என்ன செய்வேன் என்று தமிழ்த்தாய் தம் மக்களிடம் முறையிட்டுக் கொள்கிறள். அது என்ன வார்த்தை?

“ புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
பூதங்களின் நுட்பங்கள் கூறும்

மெத்த வளருது மேற்கே—அந்த
மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை”

"சொல்லவும் கூடுவதில்லை—அவை
சொல்லும் திறமை தமிழ்மொழிக்கில்லை
மெல்லத் தமிழினிச் சாகும்—அந்த
மேற்கு மொழிகள் புவியிசையோங்கும"
"என்றந்தப் பேதை உரைத்தாள்—ஆ
இந்த வசை எனக்கெய்திடலாமோ?

என்றுகூறி தமிழ் மொழியின் இன்றைய நிலைமையை உணர்த்தினன் பாரதி.

"பஞ்சபூதங்களின் நுட்பங்கள் கூறும் புத்தம் புதிய கலைகள்", அதாவது விஞ்ஞானத்தை எடுத்துக்கூறும் நூல்கள் மேநாட்டில் வேகமாக வளர்ந்து வருகின்றன. அந் நூல்கள் தமிழில் இல்லை. இல்லாதது மட்டுமல்ல; இவ்விஷயங்களை எடுத்துச் சொல்லவும் இயலவில்லை; அதைச் சொல்லவும் திறமை தமிழுக்கில்லை" என்று இன்று கூறப்படும் வாதத்தைத்தான் அன்றும் பலர் கூறிவந்ததை பாரதி குறிப்பிடுகிறார். இதே நிலை நீடித்தால்,

"கன்னிப்பருவத்தில் அந்நாள்—என்றன்
காதில் விழுந்த திசை மொழியெல்லாம்
என்னென்னவோ பெயருண்டு—பின்னர்
யாவும் அழிவுற்றிறந்தன கண்டீர்"

என்பதுபோல், தமிழ் மொழியும் அழிவுற்று இறந்துவிடும். ஏனெனில் சமூகத்தின் உயிருக்கே அத்தியாவசியமான விஷயங்களுக்குப் பயன்படாத ஒருமொழி அழிவை நோக்கித் தானே போக முடியும்? சமூகத் தேவைகளுக்கு பயன்படும் மொழிகள் தாமே வளர்ந்தோங்கும்? எனவேதான் "மெல்லத் தமிழினிச்சாகும். அம்மேற்கு மொழிகள் புவியிசையோங்கும்" என்று கூறுகிறார்.

இந்நிலைமையை மாற்றுவதற்காக,

"சென்றிடுவீர் எட்டுத் திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு
சேர்ப்பீர்!

தந்தை அருள்வலியாலும்—இன்று
சார்ந்த புலவர் தவவலியாலும்
இந்தப் பெரும் பழிதீரும்—புகழ்
ஏறிப்புவியிசை என்றுமிருப்போம்'

என்று கூறுகிறார் பாரதி.

"பிறநாட்டு நல்லறிஞர்கள் சாத்திரங்கள்
தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்:
இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்.
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை இல்லை;
திறமான புலமை எனில் வெளிநாட்டோர்
அதை வணக்கஞ் செய்தல் வேண்டும்."

என்று இதையே வேறொரு பாட்டில் பாரதி கூறுகிறார்.

மேலும்,

"உள்ளத்தில் உண்மையொளி யுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண்டாகும்;"

என்று கூறி, தமிழ் மொழியில் இந்நூல்களை இயற்ற இயலாது என்பதை நிராகரிக்கிறார்.

"வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவுமாயின்
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம்
விழிபெற்று பதவி கொள்வார்."

என்று பாடி, இன்று தமிழர் சமுதாயத்திலும், இந்திய நாட்டிலும் தாழ்வுற்று அடித்தளத்தில் இருக்கும் கோடானு

கோடி மக்கள் உயரவேண்டுமாயின் கலைப்பெருக்கு வெள்ளத்தின் பெருக்கைப்போல் மேவ வேண்டும் எனக் கூறுகிறுர்,

## ஆங்கிலத்தில் இது நடக்குமா ?

கலை—குறிப்பாக விஞ்ஞானக்கலை வெள்ளப் பெருக்கெடுக்க வேண்டுமாஞல், ஆங்கில மொழியில் அது போதிக்கப்பட்டால் ஒருக்காலும் இயலாது. ஏதோ ஆங்கிலம் படித்த ஒரு சிறு பகுதி மக்களிடமிருந்து விஞ்ஞானிகள் வர வேண்டும் என்ற நிலை உள்ளவரை, இந்நாடு விஞ்ஞான வளர்ச்சிக்கு பிறநாடுகளை எட்டிப் பிடிப்பது என்பது சாத்தியமே அல்ல. இதையும் விளக்குகிறுர் பாரதி.

விஞ்ஞானத்திலும், கலையிலும் வளர்ச்சியுற்று முன்னேறியுள்ள பிரிட்டன், அமெரிக்கா, பிரான்ஸ், ஜெர்மெனி, சோவியத் யூனியன், ஜப்பான் போன்ற நாடுகளில் எந்த நாட்டிலும் அந்த நாட்டு மக்களின் மொழியல்லாது வேற்று மொழி பயிற்சி மொழியாக இருக்கும் விந்தையைக் காண முடியாது.

சீனுவை எடுத்துக் கொள்வோம். 1949-ம் ஆண்டிற்கு பிறகு முன்—சீனப் புரட்சிக்குமுன்—இந்தியாவைக் காட்டிலும் பின்தங்கியிருந்த நாடு—புரட்சி ஏற்பட்டவுடன் சீன மொழி எல்லா மட்டங்களிலும் பயிற்று மொழியாக்கப்பட்டது. அந்த மொழியோ மிகவும் கஷ்டமானது. அதன் வரிவடிவம் சுலபமானதல்ல. 30,000க்கு மேற்பட்ட எழுத்துக்கள் இருந்த மொழி. அதைச் சுலபமாக்கினுர்கள்.

இந்தியாவுக்கு இந்தக் காலத்தில் எவ்வளவு நாடுகளிலிருந்து உதவி...கல்வித்துறையிலும்—கிடைத்தது. அமெரிக்காவிலிருந்து...போர்டு பவுண்டேஷன் போன்ற ஸ்தாபனங்களிலிருந்தும்—பிரிட்டன் இன்னும் பல நாடுகளிலிருந்தும் உதவி கிடைத்தது.

சீனுவோ வேறு எந்த நாட்டின் உதவியையும் பெறவில்லை. அப்படியாஞல், ஆங்கிலத்தின்மூலம்தான் விஞ்ஞா

ணக் கல்வி பெற முடியும், தொழில் வளர்ச்சி எய்த முடியும் என்று கூறுபவர்களின் கூற்று உண்மையானல், சீனு இந்தக் கால கட்டத்தில் மிகவும் பின் தங்கியிருக்க வேண்டுமல்லவா? இந்தியா அதைவிட முன்னேறியிருக்க வேண்டுமல்லவா?

ஆனல் நாம் கண்கூடாகப் பார்ப்பது என்ன? இந்தியா பொருளாதார நெருக்கடியில் சிக்கித் தவிக்கிறது. சீனுவோ நம்மைவிடப் பொருளாதார வளர்ச்சியில் முன்னேறிவிட்டது இயந்திரத் தொழில் வளர்ச்சியில் முன்னேறிவிட்டது. தன் னுடைய சொந்தக்காலில் நின்று கொண்டே விஞ்ஞானத் தையும் வளர்த்துள்ளது. சீன விஞ்ஞானிகள் வேறு எந்த நாட்டின் உதவியுமின்றி, அணுவையும் உடைத்துள்ளனர். அணுகுண்டையும், ஜலவாயுக்குண்டையும் செய்துவிட்டனர். கண்டம் விட்டு கண்டம் பாயும் குண்டுகளைச் செய்து கொண் டிருக்கின்றனர்.

இவைகளெல்லாம், நம் கண்முன்னே நடந்து கொண்டி குக்கும்போது, இன்னமும் இந்நாட்டில் ஆங்கிலம் இல்லையேல் விஞ்ஞானமே இல்லை என்று கூறுபவர்களை என்னவென்று கூறுவது? ''பேதை'' என்று பாரதி அவர்களைப்பற்றி கூறியது தகாததாகுமோ?

## மொழி வளருவது எப்படி?

மக்கள் பேசும் மொழிதான் பயிற்சி மொழியாக இருக்க முடியும் என்பதை மறுக்க முடியாமற் போனவுடன் இந்தப் பேதைகள், ''பிரதேச மொழிதான் பயிற்சி மொழியாக இருக்கவேண்டும். ஆனல் அது இப்பொழுது சாத்தியமல்ல. பிரதேச மொழிகளை இதற்குத் தகுதி வாய்ந்ததாக முதலில் வளர்க்க வேண்டும். வளர்ச்சி பெற்றவுடன் அதைச் செய்ய லாம்'' என்று கூறுகின்றனர்.

நீந்தக் கற்றுக்கொள்ள விரும்புபவன் தண்ணீரில் இறங் கித்தான் கற்றுககொள்ள முடியுமேயன்றி, கரையில் நின்று கொண்டே நீந்துவது எப்படி என்பதைக் கற்றுக்கொண்டு பிறகு தண்ணீரில் இறங்கலாம் என்ருல் அவன் என்றைக்கும் நீந்தக் கற்றுக் கொள்ளமுடியாது.

மொழிகள் வளர்வது என்பது சில மேதாவிகளால் மட்டுமல்ல. அம்மொழிகளைப் பேசும் மக்களால்தான் மொழிகள் வளர்கின்றன.

மேலை நாட்டு மொழிகளை எடுத்துக்கொள்வோம். நானூறு ஆண்டுகளுக்கும் முன்பு அந்த மொழிகள் இவ்வளவு வளர்ச்சியடைந்திருக்கவில்லை. அந்தக் காலத்தில் சமூகம் வளர்ச்சியடையவில்லை. அம்மொழிகளில் பெரிய இலக்கியங்களும் இருக்கவில்லை.

ஐரோப்பா கண்டம் பூராவும் நிலவியிருந்த கிறிஸ்துவ மத சம்பந்தமான நூல்கள்...பைபிள் உட்பட... இத்தாலியன் மொழியில் மட்டுமே இருந்தன. இவைகளெல்லாம் கிருஸ்துவப் பாதிரிமார்களின் ஏகபோகச் சொத்தாக இருந்தன. இந்தியாவில் சமஸ்கிருத மொழியில் இருந்ததுபோல.

மத்திய காலத்தில் மறுமலர்ச்சி இயக்கம் ஐரோப்பாவில் தோன்றியது. ஆரம்பத்தில் அது பாதிரிமார்களின் இந்த ஏகபோக உரிமையை எதிர்த்தது. பைபிள் ஜெர்மெனி, பிரெஞ்சு, ஆங்கிலம் முதலிய மக்களின் வழக்கத்திலிருந்து வந்த மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டது. பாதிரிமார்கள் இதைக் கடுமையாக எதிர்த்தனர். மக்கள் ஆதரவு மறுமலர்ச்சி இயக்கத்திற்குப் பெருகியது. ரோமன் கத்தோலிக்கச் சர்ச்சுக்கு எதிராக 'பிராடஸ்டண்டு' போன்ற போட்டிச் சர்ச்சுகள் தோன்றின.

இதையொட்டி, அந்தந்த மொழிகளாலேயே அந்தந்த நாட்டு சர்க்கார் அலுவல்களும், நீதிமன்ற அலுவல்களும், கல்விப் பயிற்சியும் நடைபெறும்போது, சமூதாய வளர்ச்சிக்கேற்ப மொழிகளும் வளம்பெற்றன. சுருங்கக் கூறினால், சமூகத்தின் சகல விவகாரங்களும் அந்தந்த மொழியிலேயே நடைபெற்றதில், மொழிகளும் வளர்ந்தன.

சைவ மதத்தைப் பரப்புவதற்காக அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் தேவராம், திருவாசகம் போன்ற நூல்களை மக்கள் சுலபமாகப் புரிந்துகொள்ளும் தமிழில் இயற்றினார்கள். அதை யொட்டி வைணவ மதத்து ஆழ்வார்கள்

திருப்பாவையையும் திருவாய் மொழியையும், மற்றுமுள்ள நூல்களையும் தமிழில் இயற்றினார்கள்.

ஏறத்தாழ இதே காலத்தில் கன்னட மொழியில் புரந்தர தாஸ் பக்திப் பாடல்களை இயற்றினார்.

கேரளத்தில் எழுத்தச்சன், ஆசான் போன்றோர் மலையாளம் மொழியில் இராமாயணம் போன்ற நூல்களை இயற்றினார்கள்.

வங்கத்தில் சைத்ய மகாப்பிரபு வங்க மொழியில் பக்திப் பாடல்களை இயற்றினார்.

உத்தரப் பிரதேசத்தில் துளசிதாஸ் இராமயாணத்தை மக்கள் மொழியில் இயற்றினார். சூர்தாஸ் ராமலீலாவை மக்கள் மொழியில் இயற்றினார். கபீர்தாஸ் மக்கள் மொழியில் பாடினார்.

பஞ்சாபில் குருநானக் 'கிரந்தி சாகிப்' என்ற மதநூலை பஞ்சாபி மொழியில் இயற்றினார்.

இந்தியாவும் சுதந்திரமாக இருந்து சமூக வளர்ச்சி ஏற்பட்டிருக்குமாயின் இந்திய மொழிகளும் வளர்ச்சியுற்றிருக்கும். ஆனால் இந்தியா பிரிட்டனுக்கு அடிமைப்பட்டது.

பிரிட்டிஷ் ஆட்சி ஆங்கிலத்தை ஆட்சிமொழியாக்கியது. சர்க்கார் அலுவல்கள் நீதிமன்றங்கள் ஆங்கிலத்தில் நடந்தன ஆங்கிலம் பயிற்று மொழியாக்கப்பட்டது. கல்வியின் நோக்கமே சமுதாய வளர்ச்சிக்கல்ல. ஆங்கிலம் கற்ற சில குமாஸ்தாக்களையும் சர்க்கார் அதிகாரிகளையும் தயாரிப்பதே கல்வியின் இலட்சியமாக இருந்தது.

அதன் விளைவு, இந்திய மொழிகளெல்லாம் அடக்கப்பட்டன. தமிழ் போன்ற தொன்மையான மொழி, ஆங்கிலத்திற்கு முன்பே வளம் பெற்ற மொழியின் வளர்ச்சிக்கு

வாய்ப்பு இல்லாமல் பிரிட்டிஷ் ஆட்சியில் மங்கியது. இந்தக் காலத்தில ஏற்பட்ட வளர்ச்சி எல்லாம், சுதந்திரப் போராட்டத்தில் ஏற்பட்ட உணர்வினுல் ஏற்பட்டதேயன்றி, சமூகத்தின் சகல அலுவல்களுக்கும் உபயோகப்படுத்துவதனுல் ஏற்படக்கூடிய பூரண வளர்ச்சி இல்லை.

நாட்டின் விடுதலைக்குப் பின்பும் இந்நிலை மாறவில்லை. இனியாவது இந்த நிலை மாறவேண்டுமா?

நாட்டின் ஒற்றுமை, நாட்டிலுள்ள பல மொழிகளைப் பேசும் மக்களின் சமத்துவம், ஜனநாயக வளர்ச்சியின் தேவைகள். நாட்டின் வளர்ச்சித் தேவைகள், நாட்டு வளர்ச்சிக்கான தேவைகள் ஆகிய அனைத்தையும் அடிப்படையாகக் கொண்டிருப்பது கம்யூனிஸ்ட் கட்சியின் மொழிக்கொள்கை. கட்சியின் பொலிட் பீரோ இதுபற்றி நிறைவேற்றியுள்ள தீர்மானத்தில் இதைக் காணலாம்.

சென்னை சட்டமன்றத்தில் ஜனவரி 23ம் நாள் மொழி சம்பந்தமான தீர்மானம் விவாதத்திற்கு வந்தபோது, சட்டசபைக் கம்யூனிஸ்டுக் கட்சித்தலைவர் ஏ. பாலசுப்பிரமணியம் பிரேரேபித்த திருத்தத்தில் இந்த அம்சங்கள் பூராவையும் காணலாம்.

தி. மு. காவின் சார்பாகவும், சர்க்கார் சார்பாகவும் விவாதத்தின் இறுதியில் முதலமைச்சர் திரு. அண்ணுத்துரையினுல் பிரேரேபிக்கப்பட்ட திருத்தத்தில், நம்முடைய பல அம்சங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டன. அவை யாவன.

## மொழித் தீர்மானத்துக்கு நமது திருத்தங்கள்

(1) தமிழும் மற்ற தேசிய மொழிகளும் மத்திய ஆட்சி மொழிகளாக ஏற்றுக் கொள்ளப்பட்டு அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும்.

(2) அரசியல் சட்டத்தில் இந்திக்குப் பிரத்தியேக அந்தஸ்து அளித்திருப்பது அகற்றப்பட்டு நாட்டின் பிற

மொழிகளுக்குக் கீழ்நிலை அளிக்கும் ஷரத்துக்களெல்லாம் அகற்றப்பட்டு, எல்லா இந்திய மொழிகளுக்கும் சம அந்தஸ்து நல்கும் வரையில் அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும்.

(3) தமிழ் மொழியும், மற்றப்பிரதேச மொழிகளில் தத்தம் ராஜ்ஜியத்தில் சர்க்கார் நிர்வாக மொழியாகவும், உயர்மட்டக் கல்வி வரையில் பயிற்சி மொழியாகவும் அடுத்த 5 ஆண்டுகளுக்குள் ஆகவேண்டுவதற்கு நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

(4) மும்மொழித் திட்டம் பயனற்றது, அது நிராகரிக்கப்பட வேண்டும்.

இத்தகைய முக்கியமான அம்சங்களை சர்க்கார் திருத்தம் ஏற்றுக்கொண்ட போதிலும், நாம் அத்தீர்மானத்தை ஆதரிக்கவில்லை. மாருக நடுநிலைமை வகித்தோம்.

இறுதியாக சர்க்கார் தரப்பில் கொண்டுவரப்பட்ட திருத்தத்திலிருந்த முக்கியமான குறைபாடுகளே இதற்குக் காரணம்.

முதலாவதாக தமிழைத் தமிழ் நாட்டில் 5 ஆண்டுகளுக்குள் சர்க்காரின் அலுவல் மொழியாக்குவதற்கும் சர்க்கார் இசைந்ததேயன்றி, உயர்நீதிமன்ற நீதி மொழியாக்கும் நமது திருத்தத்தை சர்க்கார் ஏற்கவில்லை.

இரண்டாவதாக, மும்மொழித்திட்டம் பயனற்றது; நடைமுறை சாத்தியமற்றது என்பதில் நமக்குள்ளே கருத்து வேறுபாடு கிடையாது. இந்தி பேசாத மாநிலங்களில் மாணவர்கள் தாய்மொழி, ஆங்கிலம், இந்தி ஆகிய மொழிகளைக் கட்டாயம் கற்க வேண்டும்; இந்தி பேசும் மாநிலங்களில் மாணவர்கள் தாய் மொழியாகிய இந்தி, ஆங்கிலம், வேறு ஏதாவதொரு இந்திய மொழி ஆகிய 3 மொழிகளைக் கட்டாயம் கற்க வேண்டும் என்பதே மும்மொழித் திட்டம்.

சென்ற காலத்தில் இதை அமுலாக்க மத்திய சர்க்கார் முயற்சி செய்து வெற்றி காணவில்லை. உத்தரப் பிரதேசத்தில் இருக்கும் ஒரு மாணவன் எதற்காகத் தமிழினைக் கற்க வேண்டும், அது அவனுக்கு வாழ்க்கையில் எதற்குப் பயன் படப் போகிறது? அதே போன்று தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு மாணவரும் இந்தியை எதற்குக் கற்க வேண்டும்?

இதனுல்தான் பார்லிமெண்டில் நான் பேசும்போது இந்தத் திட்டத்தை ஒரு மோசடி என்று கூறினேன்.

தமிழ் மாநில சர்க்கார் மும்மொழித் திட்டத்தை நிராகரித்த போதிலும், இருமொழித் திட்டத்தை வற்புறுத்தியது. அதாவது தாய்மொழியைத்தவிர ஆங்கிலத்தை ஒவ்வொரு மாணவனும் கட்டாயமாகக் கற்க வேண்டும் என்பது அது. இதை நாம் ஏற்றுக்கொள்ள மறுக்கிறேம்.

விஞ்ஞான ஆராய்ச்சிக்கு ஆங்கிலம், ஜெர்மன், ரஷ்யா, போன்ற மொழிகளில் ஞானம் இருப்பது பயனளிக்கும் என்பது உண்மை. இம்மொழிகளிலே ஆங்கிலம் கற்க வசதிகள் இந்நாட்டில் இருந்து வருவதும் உண்மை.

ஆனுல் விஞ்ஞான ஆராய்ச்சிக்குப் போகும் மாணவர்கள் எத்தனைபேர்? அவர்களுக்காக வேண்டி எல்லா மாணவர்களும் கட்டாயம் கற்க வேண்டும் என்று கூறுவது அர்த்தமற்றது. அந்த நோக்கத்தை மாணவர்களுக்கு விஞ்ஞானம், மற்றுமுள்ள துறைகளில் கல்வி போதிக்கப் பயன்படுத்துவது பயனளிக்கும். எனவேதான் இத்திட்டத்தை நாம் நிராகரிக்கிறேம்.

சுருங்கக் கூறினுல் இந்தி பேசாத மக்களின்மீது இந்தியைத் திணிக்கும் முயற்சியை நாம் எதிர்ப்பது போன்றே, ஆங்கிலத்தை விரும்பாத மக்களின்மீது அதைத் திணிப்பதையும் நாம் எதிர்க்கிறேம். அத்தகைய முயற்சி உத்தர பிரதேசம், பீகார் போன்ற மாநிலங்களில் எதிர்ப்பையும் கொந்தளிப்பையும்தான் கிளப்பும்.

எனவே இந்தியையோ அல்லது ஆங்கிலத்தையோ திணிக்க முற்படுவதன் மூலம் மொழிப் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியாது. எல்லா தேசிய மொழிகளின் உரிமையை அங்கீகரிப்பதன் மூலம்தான் இப்பிரச்சினைக்கும் நேர்மையானதோர், ஜன நாயக அடிப்படையில் தீர்வு காண முடியும், அதுவே கம்யூனிஸ்ட்டுக் கட்சியின் வழி, இதர தொழிலாளி, விவசாயிகள் முதலிய சகலப் பாட்டாளி மக்களின் பிரச்சினை. அவர்களுடைய நலனின் அடிப்படையில் தான் கம்யூனிஸ்டுக் கட்சி இப்பிரச்சினையை அணுகுகிறது. அப்பாட்டாளி மக்களும் உணர்வுபூர்வமாக ஆதரவளிப்பதின் மூலமாகத்தான் இப்பிரச்சினைக்கு நியாயமானதோர் தீர்வு காண இயலும்.

# பொலிட் பீரோ தீர்மானம்

பொலிட் பீரோவின் தீர்மானம் வருமாறு:-

1963-ம் வருட ஆட்சி மொழிச் சட்டத்துக்கு நாடாளு மன்றத்தில் அரசாங்கம் ஒரு திருத்த மசோதா கொண்டு வந்துள்ளது. இந்தி பேசாத மக்கள் விரும்பும்வரை ஆங்கிலத்தைத் தொடர்ந்து உபயோகிப்பதற்கு அப்போதையப் பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு கொடுத்திருந்த வாக்குறுதிக்கு சட்ட ரீதியான அங்கீகாரம் கொடுக்க இது வகை செய்வதாகக் கருதப்படுகியது.

இந்த மசோதாவுக்குக்கூட இந்தி மொழி பேசப்படும் பகுதிகளிலிருந்துமிகக்கடுமையான எதிர்ப்பு கிளம்பியுள்ளது. இந்தி மொழி பேசும் மக்கள் மீது ஆங்கிலம் திணிக்கப்படுவதாகக் கூறப்படுகிறது. இந்தியை ஒரே ஆட்சி மொழியாகக் கொண்டு வருவதை நிர்ப்பந்தமாகத் துரிதப்படுத்துவது சரியல்ல என்றும், அதை மெதுவாகச் செய்ய வேண்டும் என்றும் மும்மொழித் திட்டம் இந்த நோக்கத்தைப் படிப்படியாகக் நிறைவேற்றும் நோக்கமுடையது என்றும் கூறி காங்கிரஸ் தலைமை அவர்களைச் சாந்தப்படுத்த முயல்கிறது.

இந்தி ஆட்சி மொழியாகத் திணிக்கப்படுவதை எதிர்க்கும் சிலர் ஆங்கிலத்தை மட்டுமே ஒரே ஆட்சி மொழியாகவும், உயர்நீதி மன்றங்கள், சுப்ரீம் கோர்ட் மொழியாகவும், மத்திய நிர்வாக மொழியாகவும், இணைப்பு மொழியாகவும் பிரகடனம் செய்ய வேண்டும் என்று வலியுறுத்துகின்றனர்.

நாடாளுமன்றத்திலும், மத்திய நிர்வாகத்திலும் எல்லா தேசிய மொழிகளின் சமத்துவமும் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்றும் ஒவ்வொரு மாநில மொழியையும் அந்தந்த மாநிலங்களிலும் ஆங்கிலத்துக்குப் பதிலாக உயர்ந்த மட்டம்வரை போதனை மொழியாக உபயோகிக்கப்பட வேண்டுமென்றும் எல்லா பொது அரசு ஸ்தாபனங்களிலும் (நீதிமன்றங்கள் உட்பட) உபயோக்கிக்கப்பட வேண்டும் என்றும் நம் கட்சி

தன்னுடைய திட்டத்தில் கூறியுள்ளது. அகில இந்திய ஆட்சி மொழியாக இந்தியின் உபயோகம் கட்டாயமாக இராது. ஆனால் மத்தியில் நிர்வாக மொழியாக அது இஷ்ட பூர்வமாக வளர்க்கப்பட வேண்டும். இந்தியாவின் வெவ்வேறு மாநில மக்களுக்கிடையே தொடர்புக்கான சாதனமாக அது ஊக்குவிக்கப்பட வேண்டும்.

ஆட்சி மொழி மசோதாமீது தற்போது ஏற்பட்டுள்ள சர்ச்சையைக் கருதி நம் கட்சி நிலையை மீண்டும் வலியுறுத்த பொலிட்பீரோ விரும்புகிறது.

காலம் சென்ற பிரதம மந்திரியின் வாக்குறுதியை அமுலாக்குவதற்குக்கூட போதுமானபடி திருத்த மசோதா இருக்கவில்லை.

யூனியனின் எல்லா அரசாங்க காரியங்களுக்கும் நாடாளுமன்றத்தில் அலுவல் நடத்துவதற்கும் இந்தியுடன் ஆங்கிலத்தின் உபயோகத்தையும் அது கட்டாயமாக்கவில்லை. இந்தி பேசாத மாநிலங்களுக்கிடையே போக்குவரத்துக்கும் வேறு சில காரியங்களுக்கும் மட்டுமே இந்தியுடன் ஆங்கிலத்தையும் உபயோகிக்க வகை செய்யப்பட்டிருக்கிறது.

இந்த மசோதா இத்துடன் அரசாங்கம் கொண்டு வந்துள்ள தீர்மானமும் மத்திய அரசாங்கம் எடுத்துள்ள நடவடிக்கைகளும் மேலும் அது எடுக்க உத்தேசித்துள்ள நடவடிக்கைகளை இந்தியை ஆட்சி மொழியாக நிர்ப்பந்திக்கவும் முன்பு ஆங்கிலம் இருந்த இடத்தில் அதை வைக்கவும் உறுதி பூண்டுள்ளதைத் தெளிவாகக் காட்டுகிறது.

இந்தியை ஒரே ஆட்சி மொழியாகத் திணிக்கும் இந்த முயற்சியை நம் கட்சி எதிர்க்கிறது என்று பொலிட் பீரோ அறிவிக்கிறது. இந்திய யூனியனின் ஐக்கியத்தைக் குலைக்கவே இந்த முயற்சி வழிவகுக்கும்.

ஆகவே நம் கட்சி கீழ்வருமாறு கோருகிறது.

1. இந்தி பேசாத மக்கள் விரும்பும்வரை யூனியனின் எல்லா அரசாங்க காரியங்களுக்கும் நாடாளுமன்ற அலு

வலுக்கும் ஆங்கிலம் தொடர்ந்து உபயோகிக்கப்படுவதைக் கட்டாயமாக்கும் முறையில் இந்த மசோதா திருத்தப்பட வேண்டும். மொழிக் கொள்கைகளை மாற்றுவதற்கு அரசாங்கத்துக்கு எந்த விதி இயற்றும் அதிகாரமும் இருக்கக்கூடாது.

2. மத்தியில் நிர்வாக மொழியாக இந்தியை பல மொழிகளில் பேசும் இந்திய மாநிலங்களின் மக்கள் தாமதமாகத் தேர்ந்தெடுக்கும்வரை தற்போதைய 'நிலைமை நீடிக்க வேண்டும் என்று நம் கட்சி விரும்புகிறது. ஆங்கில மொழியுடன் இந்தியும் மற்றெல்லா இந்திய மாநில மொழிகளும் சமமாக வளர்க்கப்பட்டு மத்தியில் முடிந்த அளவு அதிகக் காரியங்களுக்கு உபயோகிக்கப்பட வேண்டும். மாநிலங்களில் மாநில மொழிகள் பல்கலைக் கழகங்களிலும், நீதிமன்றங்களிலும், எல்லா காரியங்களுக்கும் மாநில நிர்வாகம் முழுதையும் நடத்துவதற்கும் உபாயாகப்படுத்த வேண்டும்.

3. கல்வியில் மும்மொழித் திட்டத்தை நம் கட்சி எதிர்க்கிறது. அது குழந்தைகள்மீது ஆங்கிலத்தையும் இந்தியையும் அல்லது வேறெந்த நவீன மொழியையும் திணிக்கிறது. அது குழந்தைகள்மீது அனாவசியச் சுமையை ஏற்றி குறைந்தபட்ச கல்வி பொதுத் தரங்கள் பெறுவதைக்கூட தடுக்கிறது.

நம் கட்சியின் நிலை பின்வருமாறு:

(அ) பல்கலைக்கழகம், பட்டப்பின் படிப்புக் கட்டங்கள் உள்ளிட்ட எல்லா கட்டங்களிலும் பிராந்திய மொழிகள் மூலமே கல்வி போதிக்க வேண்டும். குறைந்தது, ஐந்து வருடங்களுக்குள் ஆங்கிலம் அகற்றப்படவேண்டும்.

(ஆ) 7-வது அல்லது 8-வது வகுப்புவரை எலிமென்டரிக் கல்வி தாய்மொழியில் அல்லது பிராந்திய மொழியில் மட்டுமே புகட்டப்பட வேண்டும். வேறெந்த மொழியும் கட்டாயமாகக் கூடாது.

(இ) செகண்டரி, பல்கலைக்கழகக் கட்டங்களில் விரும்பும் குழந்தைகளுக்கு ஆங்கிலமும், இந்தியும் கற்க வசதிகள் செய்து தரப்படவேண்டும்.

எல்லா நிர்வாக வேலையும் குறிப்பாக வெவ்வேறு மொழிப் பிராந்தியங்களில் அல்லது மாநிலங்களில் உள்ள மத்திய அரசாங்க இலாகாக்களிலும் அலுவல்களிலும்கூட மக்களோடு சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களையும் அந்தந்தப் பிராந்திய மொழிகளிலேயே நடத்தவேண்டும் என்பதும் நம் கட்சியின் நிலை.

மத்திய அரசாங்க வேலைகளுக்குத் தேவையான நபர்கள் வேலைக்குச் சேர்த்துக்கொள்ளப்பட்ட பின்னரே வேலையின் தன்மையையும் வேலை பார்க்கும் இடத்தையும் பொறுத்து அலுவலக வேலையைச் செய்வதற்கு கூடுதலாக மேற்கொண்டு மொழியைக் கற்குமாறு கேட்கப்படவேண்டும். எந்த மத்திய அரசாங்க வேலையில் சேர்க்கப்படுவதற்கும் அல்லது உத்தியோக உயர்வு பெறுவதற்கும் இந்தி, ஆங்கிலம் அல்லது வேறெந்த மொழியையும் கற்குமாறோ தேர்ச்சி பெறுமாறோ பொதுமுன் நிபந்தனையாக வைக்கக்கூடாது.

முடிவாக வெவ்வேறு மாநில மொழிகளுக்குச் சமத்துவத்தை உறுதி செய்வதின் மூலமே ஏககாலத்தின் அவற்றின் வளர்ச்சியை உறுதி செய்வதின் மூலமே பல மொழிகள் வழங்கும். இந்திய யூனியன் மக்களிடையே வலுவான சகோதர உணர்ச்சிகளை வளர்த்து இந்தியை மட்டுமோ அல்லது இந்தியுடன் வேறொரு மொழியையும் சேர்த்தோ மத்தியில் நிர்வாக மொழி அல்லது மொழிகளாக இஷ்டபூர்வமாகத் தேர்ந்தெடுத்துக்கொள்ளச் செய்ய முடியும். வேறெந்த வழியும் இந்திய யூனியனின் ஐக்கியத்தை குலைக்கவே வழி வகுக்கும்.



